# சர்வோ® ஜீவனை அதிகரிக்கும்.

# சொல்லுபவர்கள்-



# டாடா.

ஆறாயிரத்திற்கும் (6000) மேற்பட்ட பெட்ரோல் பங்குகளில் இந்த நட்பின் அடையாளம் சர்வோ கவனிப்பின் உத்திரவாதத்தை அளிக்கிறது. உங்கள் வீட்டருகிலும் ஒன்று உண்டு.

**சர்வோ®** இந்தியாவின் நம்பிக்கையான லூப்ரிகன்ட் அளிப்பவர்கள் — இந்தியன் ஆயில்.

டாடா — இந்தியாவில் எல்லா வீடுகளிலும் அறிந்த ஓர் நம்பிக்கையான பெயர். தங்கள் டிரக்குகளுக்கோ, பஸ்களுக்கோ, பயணிகள் வண்டிகளுக்கோ டிராக்டர்களுக்கோ லூப்ரிகன்ட் (எண்ணெய்ப்பசை) தேவையென்றால் அவர்கள் நம்புவது எல்லா வீடுகளிலும் அறிந்த நம்பிக்கையான மற்றொரு பெயர் — **சர்வோ** லூப்ரிகன்ட்.




வேறு என்ன வேண்டும் மிக அதிக அளவில் உயர்ந்த திறனுள்ள 400 க்கும் மேற்பட்ட லூப்ரிகன்ட்களும் கிரீஸும் **சர்வோ** வழங்குகிறது. **சர்வோ** - பரிதாபாத்திலுள்ள ஆசியாவின் மிக முன்னேற்றமடைந்த ஆர் & டி சென்டரிலுள்ள நமது இந்திய விஞ்ஞானிகளால் [illegible] செய்யப்பட்டது.

**சர்வோ®** - இந்தியாவில் மிக அதிக அளவில் விற்பனையாகும் எஞ்சின் ஆயில்.

IOC-282/94 TAM A

# சிரிப்பு வலை!


"என் மாப்பிள்ளை ரொம்ப மோசம்..."
"எப்படி சொல்றீங்க?"
"அறுபதாவது கல்யாணத்துக்குக் கூட வரதட்சணை வேணுமாம்!"
—ராதா வாசுதேவன்
"நம்ம தலைவரோட பையன் +2-வில் பெயில் ஆகி இருக்கலாம். அதுக்காக இப்படியா?"
"ஏன்? என்ன பண்ணிட்டார்?"
"'+2-வில் பெயில் ஆனவங்களுக்கும் மெடிக்கல் காலேஜில் இட ஒதுக்கீடு வேணும்'னு அறிக்கை விட்டிருக்கார்!"
- வடுவூர் சிவ. முரளி
"எங்க தலைவர் குழாயடி சண்டை நடக்கிற இடத்துக்குத் தினமும் வந்துட்டுப் போறாரு?"
"அவர் கட்சிக்குப் புதிய பேச்சாளர்கள் தேர்வு செய்யறாராம்!"
— சம்பத் குமார்
"எதுக்கு அடிக்கடி பேப்பர் வெயிட்டை காண்பிக்கறாங்க?"
"படத்துல வெயிட்டான கேரக்டர் எதுவும் இல்லேன்னு யாரும் சொல்லக் கூடாதாம்!"
-கொங்கணாபுரம் வே.செந்தில்
"அது என்ன டாக்டர், ஆபரேஷன் சார்ஜ் ஆயிரத்து இருபத்தோரு ரூபாய் எழுபத்தைந்து பைசா...?"
"உன் வயித்துல இருக்கும் கத்திரிக்கு எவன் பணம் தருவான்!"
-கே.சோமசேகர்
ஆசிரியர்: தமிழ் நோட்டில் பொடிப் பொடியாய், அச்சுக் கோர்த்தாற் போல எழுதும் நீ இப்போ குண்டு குண்டாய் எழுதுகிறாயே! ஏன்?
மாணவன்: உலகத் தமிழ் மாநாட்டுக்குப் பிறகு தமிழ் வளர்ச்சி அடைந்துள்ளது சார்!
-நாஞ்சில் க.நாகராஜன்




# பவாரா பால் தாக்கரேவா?

**க**ர்நாடகத்திலும், ஆந்திராவிலும் பலத்த அடிவாங்கிய காங்கிரஸுக்கு மீண்டும் ஓர் அக்னிப் பரீட்சை—மகாராஷ்டிரத்தில். காங்கிரஸ் எதிர்ப்பு அலை அவ்வளவாக இங்கே இல்லை என்பது ஆறுதல்,

ஆனாலும் காங்கிரஸுக்கே உரிய கோஷ்டிப் பூசல் தவிர, வேறு பிரச்னைகளும் உள்ளன. வேலை இல்லாத் திண்டாட்டம், விலைவாசி உயர்வு போன்ற அகில இந்தியப் பிரச்னைகள் தவிர, பம்பாய் வெடிவிபத்து விசாரணை தாமதம், ஜல்கான் செக்ஸ் விவகாரம், விதர்பா தனிமாநில விவகாரம், மிதிபட்டு இறந்த கோவரி பழங்குடியினர் பிரச்னை என்று பெரிய பட்டியல் போடலாம்.

**போ**தாக் குறைக்கு, பவார் மீது தனிப்பட்ட முறையிலும் ஊழல் குற்றச்சாட்டுகளை வாசிக்கிறது சிவசேனை. பவார், மத்தியில் பாதுகாப்பு அமைச்சராக இருந்தபோதும், மராட்டிய முதலமைச்சராய் இருந்த (இருக்கிற) போதும் நடந்ததாகக் கூறப்படும் ஊழல் விவகாரங்கள் இதில் இடம் பெற்றுள்ளன. சிவசேனைத் தலைவர் பால் தாக்கரே இந்த ஊழல்களைக் குறிப்பிடும்போது, பொறுப்பான காங்கிரஸ் எம்.பி. ஒருவரே எழுத்து மூலமாய் அவற்றைப் பட்டியல் போட்டு, தமக்குக் கொடுத்திருப்பதாகச் சொல்கிறார்.

எப்படியும் காங்கிரஸை வீழ்த்திவிட்டு மராட்டிய மாநில தலைமைச் செயலகமான 'மந்திராலயா'வில் அமரவேண்டும் என்பது சிவசேனையின் கடந்த கால் நூற்றாண்டுக் கனவு. அது இப்போது நிறைவேறப் போகிறது என்கிறார்கள் சேனையின் தளபதிகள்.

சிவசேனையின் தலைவர் பால் தாக்கரே பேசுகிற கூட்டங்களுக்கு, மக்கள் திரளாய் வருகிறார்கள். பவாரையும், காங்கிரஸையும் தாக்கரே, செமையாய் நையாண்டி செய்கிறார்; கடுமையாய் விமர்சிக்கிறார்.

காங்கிரஸ் மீது தாக்குதல் ஒரு வியூகம் என்றால், மற்ற வியூகங்கள் அவரை மகாராஷ்டிர என்.டி.ஆர் போல காட்டுகின்றன. ஆம்! இரண்டு ரூபாய் அரிசி, 27 லட்சம் பேருக்கு வேலை, 40 லட்சம் பேருக்கு வீடு என்று தாக்கரே அடுக்கியுள்ளார். அவரது மற்ற தேர்தல் வாக்குறுதிகளில் சில: தடா சட்டத்தை வாபஸ் பெறுவது, அடுத்த ஐந்தாண்டுகளுக்கு அரிசி, பருப்பு, சர்க்கரை போன்றவற்றின் விலையைச் சீராக வைத்திருப்பது, நேர்மையற்ற அமைச்சர்கள், எம்.எல்.ஏ.க்களை உடனடி பதவி நீக்கம் செய்வது, அரசு செலவுகளைக் கட்டுப்படுத்துவது!

**க**ருத்துக் கணிப்புகள், சிவசேனை—பாரதிய ஜனதா கூட்டணிக்கு மெஜாரிடி கிடைக்கும் என்கின்றன. ஒருவேளை காங்கிரஸே நூலிழை மெஜாரிடியில் பதவிக்கு வரக்கூடும் என்றும் சிலர் கூறுகிறார்கள். சிவசேனை-பா.ஜ.க. கூட்டணி ஆட்சியைப் பிடிக்கும் பட்சத்தில், முதலமைச்சராய் யார் வருவார் என்ற கேள்வியும் எழாமல் இல்லை. காரணம், பால்தாக்கரே அவரே அறிவித்துள்ளபடி வெளியில் இருந்து கொண்டு, இயக்கும் சூத்திரதாரியாகத்தான் இருக்கப் போகிறாரே தவிர, முதலமைச்சர் நாற்காலியில் அமரப்போவதில்லை.

பம்பாயிலிருந்து: **வித்யா சிவகுமார்**



# முதல்வருக்குத் தண்ணீர் ராசி! மக்களுக்கு என்ன ராசி?

"நல்ல காலம் பொறக்குது, நல்ல காலம் பொறக்குது, காஞ்சு போன தொண்டைக்கு கங்கையே வருது. தெலுங்கு கங்கையே வருது."

"சரிதான் போய்யா... இதையே சொல்லி பன்னெண்டு வருஷமா கதை கட்டிக்கிட்டுயிருக்கிங்க..."

"அண்ணாவும் தங்கை யும் ஐதராபாத்திலே தீர்மானிச்சிட்டாங்கப்பா. 12 டி.எம்.சி. லட்சியம், 3 டி.எம்.சி. நிச்சயம் — அதுவும் வர்ற டிசம்பர்ல."

"தலைவா... நமக்கு இந்த டி.எம்.சி. கணக்கெல்லாம் புரியலே.. விவரமாச் சொல்லு. மூணு டி.எம்.சின்னா, மெட்ராஸ் முழுக்கப் போதுமா?"

"சொல்றேன்பா, சொல்றேன். நமக்கு இப்போ எவ்ளோ சப்ளை ஆகுதுன்னு தெரியுமா? தினசரி 26 கோடியே 39 லட்சம் லிட்டர் - கிட்டத்தட்ட 38 லட்சம் பேருக்கு — தலைக்கு 70 லிட்டர் வீதம் சப்ளை ஆகுது.."

"இன்னாப்பா இது.. மெட்ராஸ்லே 50 லட்சம் பேர் இருக்காங்களே? 38 லட்சம் பேருக்குத்தானா சப்ளை...?"

"கேட்டேனே... அதிகாரிங்கிட்ட கேட்டேனே... லாரிலே சப்ளை ஆவறது தனிக் கணக்காம்."

"சரி அத வுடு. கிருஷ்ணா வர்றதினாலே என்னா பெனிபிட்? அத்த சொல்லு."

"மூணு டி.எம்.சின்னா 3000 கோடி கன அடிய்யா. அதையே காலன்லே பொறட்டிப் போட்டா 187 லட்சம் காலன். லிட்டர் கணக்லே சொன்னா சுமார் எட்டரை கோடி லிட்டர் வரும். ஆவியாகிப் போறது, வேஸ்டா போறதெல்லாம் கணக்குப் போட்டுக் கழிச்சுட்டா கூட, மெட்ராசுக்கு சப்ளை ஆவற தண்ணிலே, தினமும் மூணுலே ஒரு பங்கு கூடுதலா கெடைக்கும்னு வச்சுக்கோயேன்... அதான் மூணு டி.எம்.சி."

"அப்படீன்னா, நம்ம ஏரியாவுக்குக் கிருஷ்ணா தண்ணி கெடைக்குமா?"

"ஆமாய்யா! வேளச்சேரிலே வூட்டைக் கட்டிக்கினு மெட்ரோ வாட்டர் கேக்கறே! கீழ்ப்பாக்கத்தைச் சுத்தியும் வள்ளுவர் கோட்டத்தைச் சுத்தியும் உள்ளவங்களுக்குக் கண்டிப்பா கிடைக்கும்."

"அது ஏன்பா?"

"அட, அங்கதானே கிருஷ்ணா தண்ணீர் நெரப்பி வைக்கற டாங்க் இருக்கு."

"மொத்த திட்டமும் முடிஞ்ச பிறகாவது நமக்குப் பிரச்னை தீருமா?"

"அதுதான் கிடையாதுன்னேன்! 2000ம் வருஷத்திலே மக்கள் தொகை 73 லட்சம் ஆவும். அதனால அப்பவும் இதே போல தலைக்கு 70 லிட்டர்தான் கெடைக்கும்! இந்தியாவுலே மத்த பெரிய நகரங்கள்லயெல்லாம் தினசரி ஒரு ஆளுக்கு சப்ளை பண்ற தண்ணீர் இங்கே விட ரொம்ப அதிகம். பம்பாய், டெல்லி, கல்கத்தா, பெங்களூர் எல்லா இடத்துலேயும் தலைக்கு 100 லிட்டருக்கு மேலே சப்ளை பண்றாங்க."

"அட போப்பா! முதல்வருக்குத் தண்ணி ராசி இருந்தாலும் மக்களுக்குக் கிடையாது போல இருக்கு!"

"312 கோடி கொடுத்திருக்காங்க அம்மா! இன்னும் 270 கோடி வேண்டியிருக்குமாம்!"

"அம்மாவுக்குக் கோடியெல்லாம் தூசுப்பா!"

"83லே மொத்த திட்டத்துக்கும் 760 கோடி ஆகும்ன்னாங்க... இப்போ 2190 கோடி ஆவுதாம். அதனால 206 கோடிலேர்ந்து நம்ம ஷேர் 520 கோடியா எகிறிடுச்சு."

"எத்தனை கோடி ஆனா என்னப்பா... நம்ம குழாய்லே தானா தண்ணி வரப் போறதில்ல. அடிச்சுத்தான் பிடிக்கணும். அதுதானே நம்ம தலையெழுத்து!"

— ப்ரியன்

• தெலுங்கு-கங்கை திட்டம் துவக்க விழா: 1983ல்!



# காதல் கிளைகள்

"விமானத்தை மிக அருகில் பார்த்த பட்டிக்காட்டானின் பிரமிப்பு காதல்னா, அதிலேயே தினம் தினம் பயணிக்கிற 'ஏர்ஹோஸ்டஸ்' கடமை மாதிரி திருமண வாழ்க்கை...!" - இப்படி சொல்பவர் ஹேமா மனோகர். பெற்றோரின் எதிர்ப்பை மீறி வயலூர் முருகன் கோவிலில் பரபரப்பான சூழலில் நடந்தது இவர் திருமணம்.

ஒருவரைக் காதலித்து, சூழ்நிலை கட்டாயத்தால், வேறொருவரை மணந்த பானுமதியுடன் பேசிய போது,

"மனசுல அந்த நினைவுகள் எப்போதாவது எட்டிப் பார்க்கும். அப்போ ஏற்பட்ட சிலிர்ப்போ, பரவசமோ இப்ப வராது. ஏதோ தப்பு செஞ்சுட்ட குறுகுறுப்புதான் படரும்" என்றார் கிணற்றின் உள்ளிருந்து பேசும் குரலில்.

"கல்யாணத்துக்குப் பிறகு பழைய காதலரைப் பார்த்தீங்களா?" என்று கேட்டதற்கு,

"ஓ, ஒரே ஒரு தரம் பார்த்தேன். நேருக்கு நேரே அதிகம் கூட்டமில்லாத இடத்துல. சட்டுனு தலையைக் குனிஞ்சுகிட்டு வேகமா நடந்து போயிட்டேன்."

"ஏன்?"

"இதையேதான் வீட்டுக்குப் போனப்புறம் யோசிச்சேன். ஏன் பயந்தேன்?... என் குடும்பத்தையும், இப்ப வாழற வாழ்க்கையையும் நேசிக்கறேன். அதுக்கு ஏதும் ஆபத்து வந்துடக் கூடாதுன்ற பயம்தான் இதுன்னு புரிஞ்சது. கரெக்ட்தானே?" என்றார் அடிக்குரலில்.

இதையே ஒரு ஆணிடம் கேட்ட போது,

"அடி மனசுல அவ ஞாபகமும், அந்த நாட்களின் நினைவும் இருக்கத்தான் செய்யுது. இதனாலே என் மனைவிக்குத் துரோகம் செய்யறேன்னு இடையாது. இப்ப உண்மையான கணவனாய்த்தான் வாழறேன். எப்பவாவது, அதே சாயலில் பெண்ணைப் பார்த்தாலோ, நாங்க பேசிய டயலாக் மாதிரி எங்கேயாவது கேட்டாலோ மனசுல ஒரு சின்ன அலை அடிக்கும். ஸ்கூல் நாளில் போன சுற்றுலா மாதிரி, வகுப்பில் செஞ்ச விஷமம் மாதிரி, இதுவும் ஒரு அசை போடற சுவாரஸ்யம். தட்ஸ் ஆல்!" என்றார் ரொம்ப எளிதாக! இப்போது நல்ல வேலையில் இருக்கும் முப்பத்தைந்து வயது கணேசன், தமது புகைப்படத்தையும் பிரசுரத்துக்குக் கொடுத்தார்!



• கணேசன்

• ரமேஷ்

'பங்க் கிராப்' மோகனை (கனரா வங்கி) மடக்கிய போது ஆச்சர்யமாய்ப் பார்த்தார்.

"எப்படி சார் நான் காதலிக்கறதைக் கண்டுபிடிச்சீங்க?"

"முகமே சொல்லுதே" என்று பீலா விட்டோம். (அவரின் நண்பர் சொல்லித் தான் அவரை அணுகியிருந்தோம்.)

"எங்களோடது அழியாக் காதல், சார்!" என்றார் கண் இறங்கி, வார்த்தை குழைந்து, முகம் மென்மையாகிப் போய்... காதல் மயக்கம்!



• ஹேமா

• ராதா

"வர்ற சண்டே, முக்கொம்பு வந்தால் என்னவளைக் காட்டறேன். குழந்தை மாதிரி சார் முகம். என்னை ஒருநாள் பார்க்க லேன்னா ஏங்கிப் போயிடுவா..." என்று பீற்றிக் கொண்டார்.

"எதனாலே அவங்க மேலே காதல்?"

"அது... பார்த்ததுமே எனக்கு அவ, அவளுக்கு நான்னு ஒரு பனிச். ஒரே தெருதான் நாங்க இப்போ. போன மாசம் தான் புதுசா... வேண் டாம்! பிரச்னை..." என்று விழுங்கினார் ரகசியத்தை.

இதையே காதல் நோயில் அவஸ்தைப்படும் காயத்ரியிடம் கேட்ட போது,

"என்னைப் பார்த்து காதலிக் கறேன்னு சொன்ன முதல் ஆண் அவர்தான். அவர் பேசும் போதுதான், என் னோட அழகும், திறமையும் எனக்கே புரியுது" என்றார் கர்வமாய்.

"அவர் காதலிக்கறதாகச் சொன்னதுமே ஏத்துக்கிட்டீங் களா?"

"உடனே ஒத்துக்கலே. ரக சியமாய் அவரை கவனிச்சேன். நல்ல வேலை. சைட் அடிக் கறதைத் தவிர வேறு கெட்ட பழக்கம் இல்லை. அதையும் இப்ப விட்டுட்டேன்னு சொல் றாரு. எப்பவாவது சிகரெட் பிடிப்பாரு."

"இதனாலே மட்டும்தான் காதல் உண்டாச்சா?"

"எல்லாத்தையும் விட வீட் டுக்குத் தெரியாம நான் செய் யற முதல் காரியம் இது. மன கல ஒரு த்ரில். 'அவளுக்கென்ன தெரியும், சின்னப் பொண் ணுன்னு' வீட்டுல எப்பவும் சொல்ற போது, இல்லை, நானும் பெரிய மனுஷிதான்னு ஒரு சந்தோஷம் உண்டாகுது இப்ப மனசுல..." என்றார் வீட்டில் கடைக் குட்டியான இவர்.

"**கா**தல் சரியா, தவறா?" என்றதற்கு, குமாரி ராதா சொன்னார் :

"காதலிக்காதவரை தவறாகப்படுகிறது. காதல் வயப்பட்டபின் சரியாகி விடு கிறது!"

"என் நெருங்கிய தோழி முன்பெல் லாம் காதல்னாலே ஹிஸ்டீரியா வந்தது மாதிரி திட்டுவா. இப்ப, அதுலே அவளே மாட்டிக்கிட்டு வக்காலத்து வாங்கிப் பேசறா" என்று தத்துவத்தை விளக்கினார் ராதா!

"சார், நான் எந்தப் பொண்ணோட பழகினாலும் ஒரே வாரத்துல 'பாசமலர் சிவாஜியாக்கி,' என்னை 'அண்ணா'ன்னு சொல்லிடறா. சில பேர் 'நாம நண்பர்




கள் மட்டுமே'ன்னு பை பை சொல் லிட்டுப் போயிடறாங்க. வயிறு எரியுது சார். காதல்னா என்ன? எப்படி இருக் கும்? யாரைக் காதலிக்கறது? எப்படி காதலிக்கறது?" என்று நம்மிடமே கேட்ட இளைஞர் ரமேஷை பரிதாபமாய்ப் பார்த்து விழித்தோம்.

திருச்சியிலிருந்து : **கிருஷ்ணா**

# வீரப்பன் 'சரண்டர்' ஆக வாய்ப்பிருக்கு!

தமிழக காங்கிரஸில் ஆளாளுக்குப் புதிது புதிதாக தினமும் ஒரு கோஷ்டியை உற்பத்தி செய்து கொண்டிருக்கும் போது- குமரி அனந்தன், கட்சியை வளர்க்க பாத யாத்திரை போவேன் என்று சொல்வது வேடிக்கையாகத்தானிருக்கிறது. ஏதோ அவருக்குத் தெரிந்த வழி!
சேலம்-9 மு. இரவிச்சந்திரன்

'கார்ட்டூன்' பகுதியில் அரஸ் தொடர்ந்து திறமை காட்டுகிறார். 'சு.சுவாமி'யின் 'பந்தாட்டம்' அருமை! பாராட்டுக்கள்.
சென்னை-91,
என்.கார்த்திகேயன்

இப்பொழுது சமூகத்தில் நடக்கும் அராஜகத்தைத் தோல் உரித்துக் காட்டியது 'சுவர்' சிறுகதை.
இருத்தங்கல், சி. எஸ்.சேகர்.

'சுவர்' சிறுகதை அருமையாக இருந்தது. தற்போதைய நிலையைப் படம் பிடித்துக் காட்டியது போல் இருந்தது. திருவாரூர் பாபுவுக்கும், பிரசுரித்த 'கல்கி'க்கும் எங்களுடைய மனமார்ந்த நன்றி.
ஒன்னிபாளையம், இரா.பிரபு, த.வரதராசு, மு.விஜயகுமார், இரா.சுந்தரமூர்த்தி.

''சிறைச்சாலையா? 5-ஸ்டார் ஹோட்டலா?'' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை படித்தேன். மிகவும் அற்புதமாகவும், ஆச்சரியமாகவும் இருந்தது. நம் ஊரில் இது போல் கொண்டு வந்தால், குற்றவாளிகள், நிறைய குற்றங்கள் செய்து சிறைக்குள் போவதைத்தான் விரும்புவார்கள். காரணம், வெளியே வறுமையுடன் போராடுவதை விட அது எவ்வளவோ மேல் அல்லவா?
சென்னை-90,
ஆர்.சண்முகசுந்தரம்.

வீரப்பன் ஒரே ஒரு கண்டிஷனோட சரண்டர் ஆக வாய்ப்பிருக்கு... நியூயார்க் சிறைச்சாலை பற்றிய கட்டுரையை அவனுக்கு அனுப்பி வையுங்கள்...!
திருச்சி-20, ச. நாகராஜன்.

48 ஆண்டு சுதந்திரத்திற்குப் பிறகு நாட்டில் இன்னும் 33 கோடி பேருக்கு எழுத்தறிவே இல்லை என்ற தலையங்க வரிகளைப் படித்து அதிர்ந்தே போனேன். இப்படிப்பட்ட அப்பாவிகளை வைத்துக் கொண்டு தானே நம் அரசியல்வாதிகள் இந்த ஆட்டம் போடுகின்றனர்! இவர்களை அடக்கவே அடிப்படை கல்வி எத்தனை அவசியம் என்பது புலனாகிறது!
கும்பகோணம்,
எஸ்.கே.மூர்த்தி.

வாழப்பாடிக்கு ஒரு வாழ்த்துப்பா 'சுருக்' 'நறுக்'-ன்னு இருக்குப்பா ஆக மொத்தம் அருமைப்பா!
வெள்ளலூர், இளம் பூனைத்தோழன்

பெண்களுக்குச் சம உரிமைக் கோட்பாடு, பட்டிணத்திலும் பட்டிக்காட்டிலும் வேறுபடும். கருத்துக் கணிப்புக்குக் கிராமங்களில் காலடி வையுங்கள்.
மதுரை-9,இரா.கல்யாணசுந்தரம்.

'பெண் சமஉரிமை: பேச்சோடு சரிதானா?' அட்டைப் படக் கட்டுரை கண்டேன். இன்றைய சூழ்நிலையில் சம உரிமை என்பதை நினைத்துப் பார்ப்பதற்குக்கூட அவர்களுக்கு நேரமிருப்பதில்லை. அடுக்களையிலோ அல்லது அலுவலகத்திலோ சிறிது கவனக் குறைவுடன் செயல் பட்டாலும் பெண்களுக்குக் கிடைக்கின்ற வசவுகளும் 'வெகுமதிகளும்' வார்த்தையிலடங்காது. மொத்தத்தில் பெண் சம உரிமை நிலைக்க வேண்டுமாயின் இது போன்ற விழிப்புணர்வுக் கட்டுரைகளை விதி முறைகளாக்க வேண்டும்.
திருச்சி-5, தமிழ்தாசன்.

இன்னும் ஐம்பது ஆண்டுகள் கழிந்தாலும் இந்தியாவைப் பொறுத்த வரையில், சம உரிமை என்பது பேச்சோடுதான் இருந்து கொண்டிருக்கும்- ஏனெனில் கலாசார மாற்றம் ஓரிரு ஆண்டுகளில் நிறைவேறி விடுவதில்லை.
பரமக்குடி, வே.ஈஸ்வரன்

பாட்ஷா விமர்சனத்தில் வில்லன் ரகுவரனைப் பற்றி ஒன்றுமே குறிப்பிடவில்லையே! கடைசி வரி டச்சிங்! ரஜினியும் இதைப் படிப்பார் இல்லையா? ஒரு இதழ் அனுப்பி வையுங்கள்!
தூத்துக்குடி-1,
சிவராமசுப்பிரமணியன்

தங்களிடமிருந்து அந்த மோட்டார் சைக்கிளைப் பெறுவதற்குள் எங்களது தலைமுடியெல்லாம் உதிர்ந்து மொட்டையாகி விடுவோம் என்று தோன்றுகிறது. திருப்பதி போய் வரும் செலவு மிச்சமாகும் என்பது ஒருபுறமிருக்க, அந்த மோட்டார் சைக்கிள் ஓட்டும் போது கூடுதலான பாதுகாப்பு தேவைப்படும் என்பதால், கூடவே இரட்டை ஹெல்மெட்டுகளையும் பரிசாக அளிக்குமாறு வேண்டுகிறேன்.
பம்பாய்-80,
கே.கே.சுப்ரமணியன்.

வட்ட மேஜை

# ‘‘உங்கள் குழந்தையின் கனவுகள் நனவாக நாங்கள் உதவிடுவோம்’’

நீங்கள் எப்போதும் உங்கள் குழந்தைகளுக்கு சிறந்ததையே வழங்கிட பாடுபடுகிறீர்கள். அவர்கள் மீது தாங்கள் காட்டும் பரிவை வெளிப்படுத்த இதோ ஒரு வாய்ப்பு.

அறிமுகப்படுத்துகிறோம் **‘சில்ரன்ஸ் மணி பேக் பாலிஸி’** – குழந்தைகளின் உயர் கல்வி மற்றும் வாழ்வின் துவக்கம் கருதி தயாரிக்கப்பட்ட ஒரு பாலிஸி.



## சில்ரன்ஸ் மணி பேக் பாலிஸி

*சிறப்பு அம்சங்கள் :*

- காப்பீடு செய்யப்பட்ட தொகை 18, 20, 22 & 24வது வயதில் தவணை முறையில் வழங்கப்படும்.
- காலவரையறையில் எதிர்பாராத விதமாக மரணம் ஏற்பட்டால் தவணைகள் முன்பே வழங்கப் பட்டிருந் தாலும் காப்பீடு செய்யப்பட்ட முழுத் தொகையும் வழங்கப்படும்.
- 26வது வயதில் காப்பீடு செய்யப்பட்ட தொகை ரூ. 1000க்கு ரூ. 80/- வீதம் ஒவ்வொரு ஆண்டுக்கும் கூடுதல் பயன் உறுதியளிக்கப்படுகிறது.
- காப்பீடு செய்யப்பட்ட தொகையில் 10% லிருந்து 90% வரை (கூடுதல் லாயல்டி) தொடர்ந்து பிரிமியம் செலுத்துவதற்கான கூடுதல் பயன், 26வது வயதில் கிடைக்கும்.
- குறிப்பிட்ட விதிகளுக்கு உட்பட்டு முன்மொழிபவருக்கும் காப்பீட்டுத் தொகையில் 20% இன்ஷூரன்ஸ் காப்பு உண்டு.
- பிரிமியம் கட்டுவதில் பயன்மிகு சலுகைகள் கிடைக்கும்.
- காப்பீட்டுத் தொகை ரூ. 25,000/- லிருந்து ரூ. 5,00,000/- வரை.

***சில்ரன்ஸ் மணி பேக் பாலிஸி—***

**உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் அளிக்கக்கூடியது.**



குடும்பப் பாதுகாப்பின் முன்னோடி.



**லைஃப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆஃப் இந்தியா**

SAS-B/LIC/95

# Kalki Shopping Page

**RANEE SAREES**
**OTHER SUNGUDI SAREES**
**BENGAL COTTON SAREES**

**BEST QUALITY**

ATTRACTIVE DESIGNS
VARIOUS COLOURS

**VISIT**
**MADURAI TEXTILES**
2, SIVAPRAKASAM ROAD,
PONDY BASAAR,
MADRAS-17

**(Nearer to Vegetable Market)**

---

# வர்ணம் ஆர்ட் ஸ்கூல்



## தபால் மூலம் ஓவியக்கலை

உங்கள் ஓய்வு நேரத்தில் வீட்டிலிருந்தவாறே
நீங்கள் ஓவியம் கற்கலாம்.
ஏராளமான விளக்கப் படங்களுடன்
எளிய முறையில் பயிற்சி அளிக்கப்படுகிறது.
விவரங்களுக்கு 2 ரூபாய் தபால்தலை
கவரினுள் வைத்து அனுப்பவும்.

**வர்ணம் ஆர்ட் ஸ்கூல்**
115, பராக்கா ரோடு, வரதாம்பாள் தோட்டம்,
சென்னை-600 010

---

## இல்லத்தரசிகளுக்கு **8 in 1** உபயோகம்



இணைப்புகள்:
1. வெட் கிரைண்டர் 2. சப்பாத்தி பூரி மாவு பிசைதல்
3. தேங்காய் துருவுதல் 4. பழரசம் பிழிதல்
5. காய்கறி வெட்டுதல் 6. சிப்ஸ் வெட்டுதல்
7. காய்கறி துருவுதல் (சிறியது)
8. காய்கறி துருவுதல் (பெரியது)

சிறப்பம்சங்கள்: மாவு டில்டிங் மற்றும் தானாகவே வெளியேறும் வசதி 100% **Stainless Steel** ஆல் ஆனது. **Nylo Tuf gear transmission** பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்ட மோட்டார். குறைந்த இடத்தையே ஆக்கிரமிக்கிறது. இறக்குமதி செய்யப்பட்ட டபுள் பால் பேரிங்ஸ், அகன்ற பாகம் கொண்ட உருளைக் கற்கள் இயக்குவதும் பராமரிப்பதும் எளிது. விரைந்து செயலாற்ற வல்லது.
கொள்ளளவு: மாவு அரைத்தல் 2 ltr. சப்பாத்தி மாவு பிசைதல் 1kilo

*Universal* எதையும் செய்யக்கூடிய வித்தியாசமான கிட்சன் மெஷின்

*Marketed by* : SAN DOMESTIC APPLIANCES (P) LTD. 182, 100 Feet Road, Tatabad, Coimbatore - 641 012. ph : 446925. **DISTRIBUTORS FOR MADRAS** : ESSARR AGENCIES : 9, South West Boag Road, T. Nagar, Madras - 600 017. ph : 4347005; **COIMBATORE** : Video Spectrum, ph : 234453; VPR Video Vision, ph : 447877; **SALEM** : Ramco Agencies, ph : 447171, **MADURAI** : Anantha Stores, ph : 30281; Mercantile Agency, ph : 24469; **VELLORE** : Srinivasa Agency, Sri Lakshmi Agencies, ph : 20389; **ATHUR** : Lakshmi Electronics, ph : 40576; **PONDICHERRY** : Lakshmi Agencies, ph : 34736; **CUDDALORE** : Lakshmi Agencies, ph : 20853; **VILLUPURAM** : Lakshmi Agencies, ph : 3057, **TUTICORIN** : Sathya Agency Stores, ph : 24985; **KARAIKAL** : Lakshmi Enterprises, ph : 2597; **DELHI** : SRI RAMA STORES, ph : 652476; Madras Stores, ph : 5722798.

***DEALER ENQUIRIES SOLICITED***

# Kalki Shopping Page



# SPEED

ஒரு எச்சரிக்கை. ஹார்ட் பேஷண்ட்கள் தப்பித் தவறி இப் படம் பார்க்கப் போகாமல் இருக்கக் கடவீர்கள். இதயத் துடிப்பு எகிறிவிடும்.

விஷயம் ரொம்ப கலக்கல்! நகரில் அடுத்தடுத்து லிஃப்ட் டிலும் பஸ்ஸிலும் 'பாம்' வெடிக்கிறது. இலவச இணைப் பாக 'இன்ன பஸ்ஸில் 'பாம்' வைத்திருக்கிறது; 50 கி.மீ. வேகத்தில் தற்போது ஓடிக் கொண்டிருக்கும் அந்த பஸ், வேகத்தைக் குறைத்தால் வெடிக்கும்' என்று தகவல் வரு கிறது. பஸ் பயணிகளை ஹீரோ எப்படிக் காப்பாற்றுகிறான் என்பது கதை. தொண்ணூற்றொன்பது சதம் பஸ்ஸுக்குள் ளேயே நடக்கிற விஷயம். மீதி ஒரு சதம் பஸ்ஸின் ஜன் னல்கள் வழியே தெரியும் மீட்புப் படையின் நடவடிக் கைகள்.

வருஷக்கணக்கில் உழைத்திருக்கிறார்கள். பத்து காமெரா வில் படம் பிடித்திருக்கிறார்கள். 'அள்ளிக்கோ, வாரிக்கோ' என்று டாலர்களை எடுத்து விட்டிருக்கிறார்கள்.

பலன் இல்லாமல் இல்லை. உச்சகட்ட வேகத்தில் பாயும் பஸ்ஸின் அடியே புகுந்து குண்டு தேடும் ஹீரோவின் சாகசம் பயங்கர த்ரில். இங்கு நகலெடுக்க முயன்று தோல்வி தழுவப் போகிறார்கள்!

பொம்மை ஹீரோயின்களைப் பார்த்து அலுத்த கண்களுக்கு 'ஸ்பீடி'ல் வரும் பளிங்கு தங்கை யின் தத்ருப நடிப்பு ஒரு மாறுபட்ட அனுபவ மாயிருக்கும்.

அவள் பஸ் ஓட்டும் லாகவம் ஒரு கவிதை. குண்டு பீதியிலிருந்து தப்பித்ததும் அந்தக் கண் கள் காட்டும் நிம்மதி கலந்த அசதி ஒரு காவியம்.

படம் முழுக்க சேஸிங், சேஸிங் என்றிருப்ப தால் இசையமைப்பாளரை இரைச்சலமைப்பாள ராக்கி விட்டார்கள்.

ஆயினும் புதிதாக அறிமுகப்படுத்தியிருக்கும் 'ஸவுண்ட் சிஸ்டம்' மாறுபட்ட ஒலி வடிவங்களைக் கடைவிரிக்கிறது.

துடிப்புள்ள குழந்தைகளைக் கூடப் படத்துக்குக் கூட்டிப் போகலாம்; கடைசி சீனில் மட்டும் கண் ணைப் பொத்தி விடுங்கள்!

# The Specialist

'ராம்போ' புகழ் சில்வஸ்டர் ஸ்டாலோனின் மிகச் சமீப ஹாலிவுட் புரட்சி. தொழில்நுட்பரீதியில் நில வின் முதுகை உரசி நிற்கும் இப்படத் தின் கதையை எழுத, கையளவு காகி தமே அதிகம்.

தன் குடும்பம் சிதறக் காரணமா யிருந்த வில்லன் குடும்பத்தை அழிக் கப் புறப்படும் ஒரு பெண். அவள் காரியம் யாவிலும் கை கொடுத்து, கிளைமாக்ஸ் சுபமாகக் காரணமாகும் 'பாம் ஸ்பெஷலிஸ்ட்' இளைஞன்.

வெடிகுண்டு நிபுணராக ஸ்டா லோன். ஹீரோயின் ஷரன் ஸ்டோன்.

முழு நீள ஆக்ஷன் படம் போன்ற தோற்றம் இருப்பினும் சண்டை மிகக் குறைவு. உலகளா விய ஹீரோயிஸ வெளிப்பாடான அநீதிக்கு எதிராகக் குரல் - வாரி - உதை கொடுக்கும் அந்த ஒரு பஸ் சண்டைக் காட்சி தவிர வேறு டிஷ் யூம் இல்லை.

படத்தின் கடைசி ஒரு மணி நேரத்தில் அடுத்தடுத்து வெடிக்கும் குண்டுகள் கூட வன்முறை என்ற உணர்வு தராமல் ஒரு பாம் எக்ஸ் பர்ட், எத்தனை கலை நுணுக்கம்

# எங்கிருந்தோ வந்தான்

மலையாள 'சித்ரம்' தமிழில் ரீமேக். வெளிநாட்டிலிருந்து வரும் ஹார்ட் பேஷண்ட் அப்பாவை சந்தோஷப்படுத்து வதற்காக வாடகைக்கு ஒரு புருஷனை அமர்த்திக் கொள்கிறாள் மகள். காரணம், கயவாளிக் காதலன் கைவிட்டு விடுவதால்.

தெரிந்தவனாக இருக்கிறான் என்ற வியப்பே மிஞ்சுகிறது.

ஹோட்டல் அறையிலும், கடற்கரையோரக் குடில்களிலும் பாம் வைத்து, எதிரியை அழித்து, தப்பிக்கிற சீன்களில் சிண்டைப் பிய்த்துக் கொண்டு 'நாவல்டி' காட்டியிருக்கிறார்கள்.

கம்ப்யூட்டர் கைங்கர்யமோ என்னவோ, ஓர் அடுக்கு மாடி பில்டிங் இடிந்து, கடலில் விழும் சீன், மயிர்க்கூச்செரியும் தத்ருபம்.





கதாநாயகி! பழிவாங்கும் உணர்வைக் கண்கள் பேச, சென்ட்டிமென்ட்டுக்கு (மட்டுமல்ல!) உதடுகள் உதவ, உக்கிரம் காட்ட, நாசி துடிக்க, குப்குப்பென்று முகத்தில் ரத்தம் பாய்ந்து திகில் பரவ.... கிளாஸ்!

என்னதான் ஹீரோ, எக்ஸ்-சர்வீஸ் மேன் என்றாலும் இத்தனை பாம் வைத்து நாசம் செய்தவன், கடைசி வரை போலீஸ் கையில் சிக்காமல், காதலியுடன் குஷாலாக முத்தம் கொடுத்தபடியே டாட்டா போவது, ஜீரணம் ஆகாத விஷயம்.

திகிலுக்கு நடுவே 'பிகிலு'க்காகச் சேர்த்திருக்கும் சில காட்சிகள் வசூலுக்கு உதவும்.

— ஆர்.பி.ஆர்.

---

வாடகைக் கணவன் ஒரு தூக்கு தண்டனைக் கைதி. ஏன், எப்படி, எதனால் என்பதெல்லாம் வெள்ளித் திரையில் காணலாம்.

குறிப்பிட வேண்டிய விஷயம் — இயல்பான, அழுத்தமான முடிவு. கடைசி சில நிமிட சோகத்திற்கு, ஆரம்பம் முதற்கொண்டு அடித்தளம் கட்டி வரும் நேர்த்தி, பிரமிப்புக்குரியது. குறிப்பாக, அடிக்கடி சத்யராஜ் சொல்லும் 'வாழ்வா, சாவா பிரச்னை' என்கிற ஒரு வசனம். சின்னதாக ஒரு ஃப்ளாஷ்பேக்கில் ஒரு நாவல் விஷயத்தைச் சொல்கிறார்கள். இன்னும் சற்று ஆழம் காட்டியிருக்கலாம் — ஃப்ளாஷ்பேக் அமைத்த விதத்தில்.

தவிர சில அநாவசியப் பாடல்கள், வேகத் தடையாக. மறுபடி இணைந்திருக்கும் மெல்லிசை மன்னர்கள் ஒரு பாடலில் ஒளிவீசுகிறார்கள்.

கவனத்துக்குரியவர் காஸ்ட்யூம் டிசைனர். சூழ்நிலை, பின்னணிக்கேற்ப மாறுபட்ட ஆடை வகையறா.

இயக்குநர் சந்தானபாரதி, கமலோடு சேர்ந்தால் மட்டும்தான் பிரகாசிப்பார் என்கிற வாதத்தை உடைத்திருக்கிறார். நிறைவான படம்.

— துளசி






கல்கி



1995
பிப்ரவரி 12
பவ
தை 29
மலர் : 53
இதழ் : 28


# பிரதமருக்குத் தேவை: வாக்கிங் ஸ்டிக் பரிசு!

நரசிம்மராவுக்கு யாராவது ஒரு வாக்கிங் ஸ்டிக் பரிசளித்தால் தேவலாம். அப்போதாவது தடுமாறாமல் நடப்பாரா பார்க்கலாம்!

'முலாயம் சிங் யாதவ் அரசு, ஆளும் தகுதியை இழந்து விட்டது; அதற்கு மாநில சட்டசபையில் காங்கிரஸ் அளித்து வரும் ஆதரவை வாபஸ் பெற வேண்டும்' என்பது உ.பி. காங்கிரஸ் தலைவர் திவாரியின் கோரிக்கையாக இருந்தது. இதை ராவ் நிராகரிக்க, திவாரி ராஜினாமா செய்ய, ஜிதேந்திர பிரசாதாவை உ.பி. காங்கிரஸ் தலைவராக நியமித்து அனுப்பி வைத்தார் ராவ். சில தினங்களிலேயே ஜிதேந்திரரும் திவாரி பாடிய அதே பல்லவியைத் தாமும் பாட ஆரம்பித்து விட்டார்! காரணம், முலாயம்சிங் அரசு டிஸ்மிஸ் ஆக வேண்டும் அல்லது கவிழ்க்கப்பட வேண்டும் என்பதே பெரும்பாலான உ.பி. காங்கிரஸ்காரர்களின் கருத்து என்பது புரிந்து போனதுதான். மாற்றுக் கருத்து மேலிடத்திலிருந்து திணிக்கப்பட்டால் விளைவு பயங்கரமாக இருக்கும் என்பது உணரப்பட்டதுதான்.

இப்போது ராவும் கீழிறங்கி வந்து, 'முலாயம்சிங் யாதவ் அரசுக்கு ஆதரவு வாபஸ், ஆனாலும் பி.ஜே.பி. கொண்டு வரும் நம்பிக்கை இல்லாத் தீர்மானத்துக்கு ஆதரவாகக் காங்கிரஸ் வாக்களிக்காது' என்கிறார். குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை கதையாக இருக்கிறது. உ.பி. காங்கிரஸ்காரர்களின் உணர்வுகளை ராவ் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால் திவாரியைப் பகைத்துக் கொண்டிருக்க வேண்டிய தில்லை. இப்போது திவாரி, சத்யாகிரஹம், மௌன விரதம் என்று கூறிக் கொண்டு அர்ஜுன்சிங்கை அன்புடன் கட்டி அணைக்கும் நிலைமையும் உருவாகியிராது.

தமிழ்நாட்டு அரசியல் விஷயத்திலும் நரசிம்மராவின் போக்கு சிரிப்புக்கு இடமளிப்பதாகத்தான் உள்ளது. ' 'ஜெ' ஆட்சியில் ஊழல் மலிந்து விட்டது; ஆளும் தகுதியை அ.தி.மு.க. இழந்து விட்டது; அதை டிஸ்மிஸ் செய்து விசாரணை கமிஷன் அமைக்க வேண்டும்' என்பது வாழப்பாடி கோரிக்கை. இதை ஏற்க மறுத்த ராவ், தமிழக காங்கிரஸாரின் உணர்வுகளைப் புண்படுத்தி 'ஜெ' அழைப்பை ஏற்று, தமிழ் மாநாட்டுக்கு வந்து திரும்பியதுடன், அதற்கு எதிர்ப்பு தெரிவித்த வாழப்பாடியாரைப் பதவி நீக்கம் செய்து அவ்விடத்தில் குமரி அனந்தனை நியமித்தார். என்ன பலன்? இரண்டொரு தினங்களிலேயே குமரி அனந்தனும், 'அ.தி.மு.க. அரசு மீது கொண்டு வரப்பட்ட ஊழல் குற்றச்சாட்டுக்களில் மாற்றமில்லை; தமிழக காங்கிரஸின் நிலையிலும் மாறுதலில்லை' என்கிறார். எஸ்.ஆர்.பியும் இதையே கூறி, 'அ.தி.மு.க. அரசின் கடந்த கால, நிகழ்கால செயல்பாடுகள் தொடர்ந்து விமர்சனத்துக்குள்ளாகும்' என்கிறார். ஆக மொத்தம், வாழப்பாடியைப் பதவி நீக்கம் செய்ததால் நிகர பலன், அவர் அர்ஜுன்சிங்குடன் குலாவ வாய்ப்பளித்ததுதான். அர்ஜுனரை ஹீரோவாக்கி, தம்மை செகன்ட் ஹீரோவாகக் காண்பித்துக் கொண்டார் வாழப்பாடி. பிரத்யட்ச நிலைமையை ஆராயாமல் தப்பு கணக்குப் போட்டு விட்டுத் தடுமாறுகிறார் ராவ்.

அர்ஜுன்சிங்கைக் கட்சியிலிருந்து நீக்கினாரே, அவர் விஷயத்திலாவது உறுதியாக இருக்க வேண்டாமா? குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளிக்க அவருக்கு அளிக்கப்பட்டிருந்த நாலு நாள் அவகாசத்தை எட்டு நாளாக நீடிக்கிறார். நாலு நாளில் கூற முடியாத எந்த பதிலை அர்ஜுனர் எட்டு நாளில் சொல்லி விடப் போகிறார்? இன்னும் கொஞ்சம் கற்பனைக் கதைகளைக் கட்டவிழ்த்து விட்டு, ராவைத் திறமையற்றவராகக் காட்டவும் தமக்குப் புனிதராக மேக்-அப் போட்டுக் கொள்ளவும் அவகாசமும் வாய்ப்பும் அளித்ததாகிறது; அவ்வளவே.

ராவ் காங்கிரஸ் தலைவர் மட்டுமல்ல; நாட்டின் தலைவர். அவரது தடுமாற்றங்கள் தேசத்தையே தடுமாற வைக்கும்.

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# ஜெ. பற்றி ஜெயேந்திரர் பேட்டி!

**கா**ஞ்சி மகா பெரியவர் அமரராகி ஒரு வருடம் வரை எங்கும் வெளியே போகாதிருந்த ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள், தம் விரதம் முடித்தபின் முதன் முறையாகச் சென்னை வந்திருக்கிறார்.

நாம் சந்தித்த சமயம், மயிலாப்பூர் சமஸ்கிருதக் கல்லூரி வளாகத்தில், தங்கியிருந்ததாகப் பேர்தான். டைம் டேபிள் போட்டுக் கொண்டு சூறாவளி சுற்றுப் பயணம். ஒரு நிமிஷம் கூட ஓய்வில்லாமல் சென்னை நகரக் கோவில்கள், சமூக நல அமைப்புகள், விழாக்கள் என்று பம்பரமாய்ச் சுற்றிக் கொண்டிருந்தவரை, ஒரு திங்கள் இரவு பதினோரு மணிக்கு மேல் அவரது ஓய்வு அறையில் சந்தித்தோம். கண்களில் களைப்புத் தெரிந்தாலும் பேச்சில் அதே மாறாத உற்சாகம். குழந்தைச் சிரிப்பு.

சென்னைப் பயணத்தைத் தொடர்ந்து சில தென் தமிழ் நாட்டுப் பகுதிகளுக்கும் கேரளாவுக்கும் விஜயம் செய்ய விருப்பதாகச் சொன்ன சுவாமிகள், மதம், ஆன்மிகம், அரசியல், மக்கள் என்று மாறி மாறி நம்மிடம் பேசிய பல விஷயங்களின் தொகுப்பு இங்கே :

**பழுத்த ஆன்மிகவாதியான நீங்கள், இன்று ஆன்மிகத்தின் பெயரால் அராஜகங்கள் புரியும் போலிச் சாமியார்கள் பெருகிவருவது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?**

வருத்தமாகத்தான் இருக்கிறது. இப்படிப்பட்டவர்களை மக்கள்தான் இனம் கண்டு ஒதுக்க வேண்டும். அறியாமல் போலி மனிதர்களிடம் சிக்கிக் கொண்டு, பிரச்னை என்று வந்ததும் பாதிக்கப்படுபவர்கள் மக்கள்தானே? கஷ்டமும், மன வருத்தமும் அவர்களுக்குத்தானே? எந்த ஒரு காரியத்திலும் தீவிரமாக சிந்தித்து, செயல்படுவதன் மூலம் இது போன்ற அசம் பாவிதங்களைத் தவிர்க்கலாம்.

**தெரியாமல் மாட்டிக் கொண்டாலும் 'போலி' என்று உணரும் போது, ஒட்டு மொத்த ஆன்மிகவாதிகள் மேலும் வெறுப்பு வர வாய்ப்பு இருக்கிறதே! இதன் மூலம் நிஜமான ஆன்மிகவாதிகளைத் தேடி வருபவர்களும் குறையக் கூடுமே? மதப் பற்றே குறைந்து விட வாய்ப்பு உண்டல்லவா?**

நான் அப்படி நினைக்கவில்லை. 'மதம் என்பது இன்று நேற்று விஷயமல்ல. யுகம் யுகமாக வாழ்க்கை நெறிகளை வகுத்துத் தருவது மதம். இப்படிப்பட்ட ஒரு சில அசம் பாவிதங்களால் மக்களுக்கு மதப் பற்று குறைந்து விடும் என்று தோன்றவில்லை. மாறாக, உண்மையைத் தேடும் எண்ணம் இன்னும் தீவிரமாகலாம். அதனாலே மெய்யான ஆன்மிகவாதிகளின் உதவி மக்களுக்கு அவசியம் தேவைப்படும்.

**தனி நபர்கள் சிலர் இப்படி என்றால், இன்றைய அரசியல்வாதிகளுக்கும் மதம் ஒரு கருவியாக உபயோகமாகிறதே?**

சுயநலம் மிக்க அரசியல்வாதிகளின் இப்படிப்பட்ட செயல்களை இனம் கண்டு கொள்ள வேண்டும். நான் முதலிலேயே சொன்னதுதான். மக்களுக்கு விழிப்புணர்வு இருந்து விட்டால் போதும். யாராலும் மதத்துக்கோ ஆன்மிகத்துக்கோ தீமை ஏதும் செய்துவிட முடியாது.

**பூதாகாரமான பாபர் மசூதி பிரச்னையில் உங்கள் கருத்து — நிலை என்ன?**

என் கருத்து எதற்கு? அதுவும் மதத்தை அரசியலாக்கியிருக்கும் விஷயம்தான். ஆக, ஒரு அரசியல் விஷயத்தில் ஆன்மிகவாதியான என் கருத்து அநாவசியம்.

**ஆயினும் லட்சக்கணக்கான ஹிந்துக்களின் 'குரு' என்கிற முறையில்......**

ஒரு விஷயம் தெளிவாகச் சொல்லிவிடுகி

றேன். மதத்தலைவர்களுக்கு அரசியல் நோக்கு கூடாது. மக்களுக்கு நல்வழி காட்டுவதும் பக்தி மார்க்கத்தில் அவர்களைத் திருப்புவதும்தான் எங்கள் பணி. அதை விடுத்து, அரசியல் நிகழ்வுகளில் கருத்து சொல்வது எங்கள் பணி அல்ல. மேலும் அரசியல் தலைவர்கள் சொல்வதைச் சிரமேற்கொண்டு கேட்டுச் செயல்படும் தொண்டர்கள் போல் ஆன்மிகவாதிகளுக்கு, இன்றைய காலகட்டத்தில் அடியவர்கள் குறைவு. சும்மா ஆசிர்வாதம் பண்ணினால் போதுமென்று நினைக்கிறார்கள்.

**உங்களுக்கே கூட பி.ஜே.பி.யிடம் ஒரு Soft corner உண்டு என்று சொல்லப்படுவது குறித்து....**

*எனக்கா? பி.ஜே.பியிடமா? (சிரிக்கிறார்)* அரசியலுக்கு அப்பாற்பட்டது காஞ்சி மடம். எனக்கு எப்படி இப்படி ஒரு பெயர்? பி.ஜே.பி என்ன! காங்கிரஸ்காரர்கள், அ.தி.மு.க, தி.மு.க என்று எல்லா கட்சிக்காரர்களும் தான் என்னிடம் வருகிறார்கள். தங்கள் கஷ்டங்களைச் சொல்வார்கள். ஆசி வாங்கிப் போவார்கள். பேச்சு வாக்கில் அரசியல் நிலவரங்கள் பற்றியும் சொல்வார்கள். வெறுமனே கேட்டுக் கொள்வேன். கட்சி, கொள்கை, இனம், பேதம் ஏதுமின்றி அவர்களுடைய நல்வாழ்வுக்காக ஆச்சாரியாளிடம் பிரார்த்தித்து ஆசி வழங்குவேன். அவ்வளவே!



**எனில், உங்கள் 'ஜன கல்யாண்' இயக்கத்திற்கு ஆர்.எஸ்.எஸ் ஆதரவு இருப்பதாகச் சொல்லப்படுவது பற்றி.....?**

பார்த்தீர்களா? இப்போதுதானே சொன்னேன்? எனக்கே அரசியல் தொடர்பு ஏதும் கிடையாது, அவசியமில்லை என்னும் போது, என் இயக்கத்திற்கு மட்டும் எப்படி ஆர்.எஸ்.எஸ் ஆதரவு இருக்க முடியும்? அல்லது தேவைப்படும்? ஆர்.எஸ்.எஸ் காரர்களே இதை ஒப்புக் கொள்ளமாட்டார்கள். ஜன கல்யாண் ஒரு சமூக விழிப்புணர்வு அமைப்பு. பல நல்ல காரியங்கள் — எல்லாத் தட்டு மக்கள் மத்தியிலும் செய்து வரும் ஓர் அமைப்பு. இதற்கும் அரசியல் சாயம்

'ரத்ன சிம்மாசனத்தில் அமர்ந்து ஜெயேந்திரர் பீடாதிபதியாகப் பொறுப்பேற்றார்' என்று வந்த பத்திரிகைச் செய்தி பற்றி பால பெரியவர் சங்கரவிஜயேந்திரரிடம் கேட்டோம்:

''பெரியவர் 30 வருஷங்களுக்கு முன்பே 69 வது பீடாதிபதியாகப் பதவி ஏற்று விட்டார். இந்த ரத்ன சிம்மாசன வைபவம் என்பது - நியதிப்படி சிஷ்யர், குருவுக்குச் செய்ய வேண்டிய ஒரு மரியாதை. சாஸ்திரப்படி, முன்பிருந்த பீடாதிபதிகளுக்கு அவர்தம் சிஷ்யர்கள் வரிசையாகச் செய்து வந்ததுதான் இது!

''மகா பெரியவர் காலமானதும் ஒரு வருடம் மடத்தில் எந்த விழா கொண்டாட்டங்களும் இல்லை என்பதால் அதன் பின் இவ்வைபவத்தைச் செய்ய நான் விரும்பினேன். குருவிடம் (ஜெயேந்திரர்) பேசினேன். ''மார்கழி கழியட்டும்'' என்றார். அதன்படி தை பிறந்ததும் அதனைச் செய்து முடித்தேன்.

''ஆதி சங்கரர் வழி வந்த எங்கள் குருவே, உங்கள் அருள், ஆசியைப் பூரணமாக மக்களுக்கு வழங்கி, நல்வழி காட்டப் பிரார்த்திக்கிறோம் என்கிற அர்த்தத்தில் வரும் சுலோகத்தைச் சொல்லி, அவரை ஆசனத்தில் அமர்த்தி வணங்கும் நிகழ்ச்சிதான் அது. பீடாதிபதி ஆனதற்கும் இதற்கும் சம்பந்தமில்லை'' என்றார் விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

— **துளசி**

பூசுவது தவறு.

**தமிழக அரசு - அரசியல் பற்றி உங்கள் பார்வை என்ன?**

நான் எதற்குக் கருத்து சொல்ல வேண்டும்? யாராவது அரசியல்வாதியிடம் கேட்கப்பட வேண்டிய கேள்வி.

**ஜெயலலிதாவின் கோவில்கள் பராமரிப்பு - புனருத்தாரண நடவடிக்கைகள் பற்றி உங்கள் அபிப்பிராயம்?**

ரொம்ப நல்லகாரியம் செய்திருக்கிறார் அவர். எத்தனையோ கோவில்களில் ஒரு வேளை விளக்கேற்றக் கூட வசதி இல்லாத நிலை இன்று. நித்யபடி பூஜை கைங்கர்யங்களுக்கு நிதி ஒதுக்கி வழிவகுத்திருப்பது பாராட்டப்பட வேண்டிய நல்ல காரியம். மேலும் பணிகள் இன்றுவரை நல்லபடியாகவே நடந்து வருகின்றன. திருப்தியாக இருக்கிறது.

**சு**வாமிகளுடன் மேலும் பேசிக் கொண்டிருந்ததில் சமூக நலப்பணிகளில் காஞ்சி மடம் இன்னும் தீவிரமாக ஈடுபாடு காட்ட விருப்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. "கால மாற்றத்துக்கேற்றாற் போல காஞ்சி மடமும் தன் முகம் மாற்றிக் கொள்ளுமா?" என்ற போது, "நேற்று வரைக்கும் எந்த பத்திரிகையாளருக்கு எந்த சங்கராச்சாரியார்கள் பேட்டி கொடுத்திருக்கிறார்கள்? இப்படி ராத்திரி பதினோரு மணிக்கு மேல் பேட்டி கொடுப்பதே ஒரு மாற்றம் தானே!" என்று சொல்லிச் சிரிக்கிறார், ஜெயேந்திரர்!

சந்திப்பு : **கிச்சா**

படங்கள் : **கேமரா திருஞானம்**

## அடுத்த இதழில்....

●● பட்டகாலிலே படும்; கெட்ட குடியே கெடும்!

— ஒரு குடும்பத்தின் கண்ணீர்க் கதை!

●● ஜெ. — என்.டி.ஆர்: புதிய உறவுகள் நிலைக்குமா?

— அலசல்

+

கி.ராஜேந்திரன் எழுதும்

# பூனைகள் ராஜ்ஜியம்

மாறுபட்ட மர்மத் தொடர் ஆரம்பம்!



## எறும்பார் ரிப்போர்ட் :

ஆபீஸ் முடியும் நேரம். தலைசீவி, முகம் கழுவி, பாக்கெட்டில் சில்லறை சரிபார்த்த சமயம், எறும்பார் சுறுசுறுப்பாக நுழைந்தார்.

"இப்படி வீட்டுக்குப் போறதுலயே குறியாயிருக்கியே. வாங்கற சம்பளத்துக்கு ஒழுங்கா வேலை பார்க்க வேணாமா! சேரளாவுல பாரு..." என்று ஆரம்பித்து விட்டு, லைட்டையும் ஃபானையும் திரும்பவும் 'ஆன்' செய்து விட்டு வந்து உட்கார்ந்தார்.

"ஜி. கோபாலகிருஷ்ண பிள்ளைன்னு அரசாங்க அதிகாரி - அடிஷனல் சீஃப் செக்ரடரி - இவர் பொறுப்பிலிருந்த பொதுப்பணித் துறை இலாகாவை வேற ஒரு அதிகாரிக்கு மாத்திக் குடுத்தாங்க. அப்படிக் குடுத்த பிறகு தனக்கு வேலையே 'போறல்லை'ன்னு மேலதிகாரிக்குப் புகார் பண்ணியிருக்கார் கோபாலகிருஷ்ண பிள்ளை!

'எனக்குப் பதினைஞ்சாயிரம் சம்பளம்... அது தவிர பல வசதிகள், சௌகரியங்கள்... எல்லாம் சேர்த்தா முப்பதாயிரம் பெறும். ஆனா, அவ்வளவு தொகைக்கு உண்டான வேலை நான் செய்யல்லை. அதனால உடனே நடவடிக்கை எடுக்கணும்'னார்... மேலதிகாரியும் பழையபடி பொதுப்பணித் துறையை அவர் பொறுப்புக்கே கொடுத்துட்டார்...."

"அப்படியா!" என்று நிஜமாகவே அதிசயித்து, கம்பி நீட்டப் பார்த்த ஆபீஸ் பையனைத் தடுத்து நிறுத்தி, காப்பிக்குக் காசு கொடுத்தேன்.

"சார்! இந்த நோட்டு செல்லாது!" என்னிடம் வேறு நோட்டு இல்லாவிட்டால் வீடு போகும் வழிபார்க்கலாமே என்ற நப்பாசையில், அழுக்கு பத்து ரூபாய்த் தாளை அவன் திரும்ப நீட்டினான்.

"எல்லாம் செல்லும்! போப்பா!" என்று உரிமையோடு அவனை அதட்டி அனுப்பிய எறும்பார் கேட்டார்:

" 'ரூபாய்'னு ஏன் பேர் வந்தது தெரியுமோ...?"

"ஏன்?"

"டெல்லி சுல்தான் - ஷெர்ஷா சூரின்னு பேரு. அவன்கிட்டே 178 கிராம் எடையுள்ள ஒரு வெள்ளிக் காசைக் காட்டினாங்களாம். "ரூபையா!" அப்படின்னு ஆச்சரியப்பட்டுச் சொன்னானாம் அவன். ரூபையான்னா 'அட அழகா இருக்கே!'ன்னு அர்த்தம். அவன் ஆச்சர்யப்பட்டு சொன்ன வார்த்தைதான் இன்னிக்குக் காசுக்குப் பேரா நிலைச்சிருக்கு..."

"பேருதான் பிரமாதம்; மதிப்பையே காணும்!" என்று கடுப்படித்தேன்.

"என்ன அப்படி சொல்லிட்டே! அந்தக் காலத்து ஓட்டைக் காலணா இருக்கா உங்கிட்டே? அதுக்கு இன்னைய மதிப்பு நாலு ரூபாய்!"

"என்ன ஜோக் அடிக்கிறதா நினைப்பா?"

"அட இல்லப்பா, ஓ. ஹரிஹரய்யா என்கிறவர்



• ஆர். ராதா

இந்த மாதிரி காசுகளோட, அபூர்வ தகவல்களையும் சேர்த்து வைச்சிருக்காரு... உலகத்திலேயே ரொம்ப




• மிகப் பெரிய காசு!



"என்ன சார், இலையில உட்கார்ந்துகிட்டே கண் கலங்கறீங்க?"

"என்னோட அறுபது வயசில, நான் எத்தனையோ கல்யாணத்திலே சாப்பிட்டிருக்கேன். ஆனா, இந்த கல்யாணத்திலதான் குழம்புக்கும், ரசத்துக்கும் 'தனித்தனியா' அப்பளம் போட்டாங்க. அந்த ஆனந்தத்தில் கண் கலங்கிடுச்சு..."

- ஆர். வசந்தகுமார்.

---

பெரிய காசு எது தெரியுமா? ஜஹாங்கிர் வெளியிட்ட ஆயிரம் மொஹர் காசுதான்! 11935.8 கிராம் எடை; அசல் தங்கம்...!"

"யப்பாடியோவ்!"

"தங்கக் காசுன்னதும் இன்னொரு விஷயம் நினைப்பு வருது..."

"என்ன? கடத்தலா?"

"வம்புக்கலையற பார்த்தியா?! நான் சொல்ல வந்தது gold medal பத்தி... இந்தியாவுக்கு 43 தங்கப் பதக்கம் கிடைச்சது தெரியுமா?"

"எனக்கு ஏற்கெனவே காது குத்தியாச்சு வாத்யாரே!"

"இப்போ திரும்பவும் புதுசா குத்தி தங்கக் குண்டலம் போடப் போறேன்னு நினைச்சியான்னா அந்த ஆசையை விடு! தங்கப் பதக்கம் கிடைச்சது ஜகார்த்தாவுல நடந்த ரஷியன் வெடரன் சாம்பியன்ஷிப் போட்டியில. இது நாப்பது வயசுக்கு மேலானவங்களுக்கான போட்டி. நம் நாட்டிலேருந்து 120 பேர் கலந்துக்கிட்டாங்க. தமிழ்நாட்டிலேருந்து மட்டும் ஆறு பேர். இந்தியாவுக்குக் கிடைச்ச மொத்த 113 பதக்கங்கள்லே, ஆறு தங்கம், அஞ்சு வெள்ளி, ஒரு வெங்கலம் தமிழ்நாட்டு வீரர்கள் வாங்கிக் குடுத்தது தான்!"

"நாற்பதைக் கடந்த நாடுபுகழ் வீரர்களா...?"

"சும்மா கிண்டலடிக்காதே! இங்கே அம்பேத்காரைத் துரத்தி, ஏறறதுக்குள்ளவே உனக்கு மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்குது. 51 வயசு ஆர். ராதா என்கிற வீரர் எப்படி பயிற்சி பண்றார் தெரியுமா? தினமும் பீச் மணல்ல ஓடறார்; பரங்கிமலை ஏறி, இறங்கி பயிற்சி எடுக்கிறார்."

"அட! இவங்களுக்குன்னு அமைப்பு இருக்குமே?"

"உம்! இந்தியன் வெடரன் அதலடிக் ஃபெடரேஷன். அடிஷனல் டிஜிபி - தேவாரம்தான் தலைவர் அதுக்கு. ஆனால், பெரும்பாலும் வெளிநாட்டுப் போட்டிக்கெல்லாம் இந்த வீரர்கள் சொந்த செலவுலதான் போய்ட்டு வராங்களாம். சில பேருக்கு மட்டும் ஸ்பான்ஸர்ஷிப் கிடைக்குதாம்."

"பாவம், இல்ல..."

"ஆமாம்! நீங்கள்ளாம் இதைப் பத்தி எழுதினா அவங்களுக்கு ஏதானும் உதவி கிடைக்கலாம். எங்க! உங்களுக்குக் கவனமெல்லாம் சின்னத் திரையிலயும் பெரிய திரையிலுமாத் தான் இருக்கு..."

"ஏன்! நாங்களும்தான் எழுதினோம். அமுதாவைப் பத்தி பத்திரிகைகள்ல எழுதின பிறகு அவங்களுக்கு நிறைய உதவியெல்லாம் கூட கிடைச்சது..."

"இன்னொரு அமுதாவா வரக்கூடிய அளவுக்கு இன்னிக்கு ஒரு பொண்ணு இருக்காங்க. கஜலட்சுமின்னு பேரு."

"ட்ரையாதலான் சாம்பியனா?"

"ஆமாம். பத்தாவது பரீட்சை கூட எழுதாம பிராக்டிஸ் பண்ணியிருக்காங்க. அப்பா அம்மா நல்லா 'சப்போர்ட்' பண்ணியிருக்காங்க..."

"சிட்னியில கி.பி. 2000 வருஷம் நடக்கப் போற ஒலிம்பிக்ல இந்த ட்ரயாதலான் போட்டிய சேர்க்கப் போறாங்களாமே?"

'பரவால்லையே! உனக்குக் கூட விஷயம் தெரிந்திருக்கே...' என்பது போல ஒரு பார்வை பார்த்துத் தொடர்ந்தார் மிஸ்டர் எறும்பு :

"அதனாலதான் ட்ரயதலான் கோச் வீரபத்ரன் இந்த விளையாட்டுக்கு இன்னும் கவனமும் ஆதரவும் தரச் சொல்றார். இரண்டு வருஷமா டிரயதலான் தேசிய சாம்பியனா இருக்கிற ஆறுமுகம் பத்தாவது படிச்சுட்டு வேலை இல்லாம இருக்கார். சப்ஜூனியர் பிரிவுல புகழேந்தின்னு ஒரு பையன் முதல் இடம் வாங்கியிருக்கான். அவன் மீனவ குடும்பத்துப் பிள்ளை. ...இந்திய டிரயத்லான் கூட்டமைப்பு, பயிற்சி விஷயத்துல இவங்களுக்கு நிறைய உதவுது..."

"ஆனா பணம்தான் பிரச்னை இல்லையா...?"

"ஹூம்..."

இழுத்து பெருமூச்சு விடும் சாக்கில், பையன் கொண்டு வைத்த காப்பியின் மணத்தை உள்ளிழுத்துக் கொண்டார் மிஸ்டர் எறும்பு.

தகவல்கள் : **சாருகேசி, எஸ். எஸ். மணி, நிர்மலா சக்ரவர்த்தி, ஜி.எஸ்.எஸ்**



# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990
பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை- 600 002.
கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569



### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%**
5 வருடங்கள்
ரூ.50,000/-
அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- மாத வட்டி ரூ.1.85 மட்டுமே
- விரைந்த சேவை.
- சென்னை மாநகராட்சி இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- R.D. கட்டத் தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

# பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.



சேர்மன்:
**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
ஸ்ரீகந்தக்கோட்டம்,
சென்னை–600 003.
ஆலோசகர்
பார்க் டவுன் பெனிபிட்
பண்டு லிட்.

இயக்குநர்கள் குழு
R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday

# அபாயம்!



## அறை எண்-10

## 4

வெள்ளைக் கோட்டில் டாக்டர் ஒரே சுறு சுறுவில் இருந்தார்.

அருணாவின் சடலம் அவர் முன்னால் பனி மேஜையில் கிடத்தப்பட்டிருந்தது.

உணவுக் குழாயைக் கழுத்திலிருந்து வயிறு வரை வெளியே எடுத்திருந்தார்கள்.

–திலக்! என்றார் வெங்கட்ராம்! தமது துணை டாக்டரை நோக்கி!

திடுக்கிட்டது போல அவன் திரும்பினான்.

–இந்தக் கேஸ் ரொம்ப முக்கியம்! எந்த டெஸ்ட்டையும் விடக்கூடாது; ஏன் தயங்கறே?...

–ஸார்! என்று உணர்ச்சியாக திலக் பேசினான்.

–கடவுள் படைச்ச அழகான உடம்பு ஸார்! தலை ஓட்டை அறுக்கவே கஷ்டமாயிருக்கு ஸார்!

–சரிதாம்போ! ஆஸ்பத்திரியிலே வந்து உனக்கு ஞானோதயம் ஏற்படுதா? அப்புறம் புத்தர் ஆகலாம்! முதல்லே ரம்பத்தைப் பிடி...

காலையில் பல மணி நேரங்கள் வேலை நடந்தது.

பன்னிரண்டு பதினைந்துக்கு -டாக்டர்! என்று செல்லமாக அழைத்து, தொப்பியைக் கையில் ஏந்திய நிலையில் இன்ஸ்பெக்டர் நுழைந்தார்.

அதற்குள் மேஜை சுத்தம் செய்யப்பட்டு இருந்தது. டாக்டர் வெங்கட்ராம் ஒரு ஜாடியில் ஃபார்மலின் ஊற்றி அதில் சில துண்டங்களைப் போட்டுக் கொண்டிருந்தார்.

முகம் இளைத்திருக்க, தலை விழுதுகள் நெற்றியில் அலங்கோலித்திருந்தன.

–வாங்க! நாம்ப அடுத்த அறையிலே உட்காரலாம். இங்கே இருக்கவே பிடிக்கலை! என்றார் வெங்கட்ராம்.

ஆபீஸ் அறையில் அமர்ந்தார்கள். காப்பி வரவழைக்கப்பட்டது.

–டாக்டர்! சொல்லுங்க! தொடர்கதை ஸஸ்பென்ஸ் மாதிரி நிற்க விட்டுட்டீங்களே! என்று பாவனை இழுப்பில் பேசினார் இன்ஸ்பெக்டர்.

– சொல்றேன்! முதல்லே உங்களுக்கு ஒரு ஷாக்! அந்தப் பெண்ணை அடிச்சு கொன்னிருக்காங்கன்னு சொன்னீங்க! அது நடக்கலை!

இன்ஸ்பெக்டரின் விழிகள் நிலையாயின.

–என்ன டாக்டர் இப்படிச் சொல்றீங்க?

–வேறே நான் எப்படி சொல்றது? உண்மையைத்தானே சொல்ல முடியும்! முதல்லே தெரிஞ்சுக்குங்க- தலையிலே அடிச்சு அவ செத்துப் போயிருந்தா முதல்லே மூளையைச் சுத்தி உள்ள 'மெம்ப்ரேன்' கிழிஞ்சு போயிருக்கணும்! அது நடக்கலை!

–அப்புறம்?

–இல்லாட்டி அடிச்ச அடி மூளையையே காயப்படுத்தி இருக்கணும்! அதுவும் இல்லை. மூளையிலே ரத்தக் கசிவும் ஏராளமா இருந்திருக்கணும்! அதுவும் இல்லை. ஸ்பைனல் திரவத்திலே ரத்தம் கலந்திருக்கணும் அதுவும் இல்லை,

–கடவுளே! என் ஊகம் எல்லாம் பறந்து போச்சு, அப்போ அவள் எப்படித்தான் இறந்தா?

–நச்சு வாயு தாக்கி இருக்கு! கார்பன் மானாக்ஸைட்!

–என்ன ஸார்! நேத்திக்கு என்னவோ டையாக்ஸைட்னு சொன்னீங்க! அதுவும் சந்தேகம்னு சொன்னீங்க! இன்னிக்கு அது எப்படி மாறி மானாக்ஸைட் ஆச்சு?...

உள்ளே வந்த பையன் மூவருக்கும் காப்பி வழங்கி விட்டுப் போக, டாக்டர் வெங்கட்ராம், குடித்து விட்டு, ஒரு சுகப் பரவசத்தில் கண்ணை மூடினார்.

–சொன்னேன்! அப்புறம் அது இல்லைனு தெரிஞ்சுது. காரணம் நான் அப்போ அருணாவின் ரத்தத்தைத்தான் சோதனை செய்திருந்தேன்!" ரத்தத்திலே பத்து

புஷ்பா தங்கதுரை

சதவீதத்துக்கும் குறைவா கார்பன் இருந்தா நான் செஞ்ச டெஸ்டிலே அதைக் கண்டு பிடிக்க முடியாது!

-அப்படியா டாக்டர்?

-ஆமாம் ஒரு வேளை அருணா அந்த மோட்டல் அறையிலேயே இறந்து போய்; அவள் உடலை உடனே இங்கே கொண்டு வந்திருந்தீங்கன்னா, நிச்சயம் நச்சு வாயுவைக் கண்டு பிடிச்சிருப்போம்...!

-இப்போ என்ன ஆச்சு?

-மோட்டல்ல மயக்கமாகக் கிடந்தவளை நீங்க ஆஸ்பத்திரியிலே சேர்க்க வேண்டி இருந்தது. அங்கே அவள் பதினாலு, பதினைஞ்சு மணி நேரம் உயிரோடு இருந்திருக்கிறா. அப்புறந்தான் இறந்திருக்கிறா!

-அதனாலே...

-அந்தப் பதினாலு மணி நேரத்திலே, ரத்தத்தில் இருக்கற கார்பனை நம்ப உடலே வெளியிலே தள்ளிடும். நம்ப உடலுக்கு அப்படி ஒரு சக்தி உண்டு.

-விஞ்ஞானம் ரொம்ப சுவாரஸ்யமா இருக்கு டாக்டர்! அப்போ இந்தக் கேஸிலே எப்படித்தான் கார்பனை கண்டு பிடிச்சீங்க!

-வழி இருக்கு! அருணாவின் மூளையைத் திறந்து பார்த்துட்டோம்.

-அதில் என்ன தெரியும் டாக்டர்?

-மூளையிலே க்ரே மாட்டர் பகுதியிலே சில இடங்களிலே ஸெல்லுங்களே செத்துப் போயாச்சு. சில இடங்களிலே மட்டும் ரத்தக் கசிவு, வட்ட வட்டமா தெரிஞ்சுது.

-ஓ! என்று தலையை ஆட்டினார் இன்ஸ்பெக்டர்.

-மூளையிலே குறிப்பிட்ட பகுதியிலே இப்படி நடந்தா அது கார்பன் மானாக்ஸைட் நச்சுனாலே ஏற்பட்டதுன்னு எங்க சாஸ்திரம் சொல்லுது!

வெங்கட்ராம் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே சொன்னார்.

-ஏன் டாக்டர்? மோட்டல் அறையிலே விளக்கு எரிஞ்சதே! அதனோட புகை தானே இந்தக் கார்பன் மானாக்ஸைட்? என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

-நோ நோ நோ! நல்ல வேளை அதைக் கேட்டீங்க! அது கார்பன் டையாக்ஸைட்! விளக்கு எரியும்போது உண்டாகிறது.

-அப்போ இந்த மானாக்ஸைட் எங்கிருந்து வந்திச்சு?

-அதை நீங்க தான் கண்டுபிடிக்கணும்? பொதுவா இந்த மானாக்ஸைட் வாயு, 'கம்பஸ்சன்' மூலம் உற்பத்தியாகிற புகை! கார்கள் விடுகிற புகை இதுதான்!

பாங்க் மானேஜர் பெரிய லெட்ஜரைப் புரட்டினார். நிமிர்ந்து இன்ஸ்பெக்டரைப் பார்த்தார்.

-அன்னிக்கு அருணா ஒரு லட்சம் எடுத்திருக்காங்க!



-மிச்சம் எவ்வளவு இருக்கு?

-ஒன்பது லட்சம்!

-இதுக்கு முன்னாடி எடுத்திருக்கிறாங்களா?

-இல்லை. கம்பெனியை விட்டு விலகினபோது போட்ட பணம் அப்படியே இருந்திருக்கு.

-பாங்குக்கு அருணா எத்தனை மணிக்கு வந்தாங்க?

மானேஜர் உடனே கிளார்க்கைப் பார்த்தார்.

-பதினோரு மணி இருக்கும் என்றார் கிளார்க்!

-அவங்க கூட யாராவது வந்தாங்களா?

-யாரும் வந்ததாத் தெரியலை!

-அவங்க பொதுவா எப்படி இருந்தாங்க?

-ஸார்! கொஞ்சம் வாடினாப்

போலத்தான் இருந்தாங்க! எதையோ தீவிரமா யோசிக்கிற மாதிரி தெரிஞ்சுது!

-பணத்தை எடுத்துட்டு உடனே போயிட்டாங்களா?

-ஆமா ஸார்!

மானேஜர் குறுக்கிட்டார். -உங்களுக்கு எப்படி பாஸ் புக் கிடைச்சுது?

-மோட்டல் வெளியிலே மூணு பர்லாங் தள்ளி ரோட் ஓரமா கிழிச்சுப் போட்டிருந்திச்சு! நான்தான் துப்பு ஏதாவது கிடைக்குதான்னு அங்கே கொஞ்சம் அலசினேன்.

-பிரமாதமா கண்டு பிடிச்சிருக்கீங்க இன்ஸ்பெக்டர்! அப்போ யாரோ பணத்துக்காக அவளைக் கொலை பண்ணியிருக்கணும்! என்றார் பாங்க் மானேஜர்!

இன்ஸ்பெக்டர் சிறிதாக ஒரு புன்னகைக் காட்டினார்.

—இல்லை ஸார்! நான் அந்த காட்டேஜுக்கு வந்தது இரவு ஏழு மணிக்கு மேலே தான்! சத்தியமா சொல்றேன்.

பிருதிவியின் முகம் வெளிறி இருந்தது. ரொம்பவும் களைத்திருந்தான். இன்ஸ்பெக்டரை வெறுப்புடன் நோக்கிக் கொண்டிருந்தான்.

-அருணா அன்னிக்குக் காலை பதினோரு மணிக்கு லட்ச ரூபாய் பாங்கிலே இருந்து எடுத்திருக்காங்க! அதை அவ பையிலே காணலை! என்றார் இன்ஸ்பெக்டர்!

-ஏன் ஸார்! அதை நான் எடுத்தேன் என்கிறீங்களா? எரிந்தான் பிருதிவி.

-இல்லைனுதான் சொன்னேன்! உங்க மேலே பழி போடலை!

-தயவு செய்து என் பாங்க் பாலன்ஸைப் போய்ப் பாருங்க! எனக்கும் என் மனைவிக்கும் நாலு அக்கௌண்ட் இருக்கு. ஒவ்வொன்றிலும் மினிமம் பத்து லட்சம் இருக்கும்!

-ஆத்திரப் படாதீங்க மிஸ்டர் பிருதிவி! நாங்க சில வழக்கமான விசாரணை பண்ண வேண்டி இருக்கும்! அன்னிக்கு ஏழு மணிக்கு முன்னாடி நீங்க அருணாவைச் சந்திக்கவே இல்லையா!

-இல்லை! இதை முன்னாடியே சொல்லியாச்சு!

-பகல் பூராவும் மோட்டல் பக்கம் போகலையா?

-போகலை

- ஆபீஸ்லே குறிப்பா சொல்லும்படி என்ன செஞ்சீங்க!

-ஓ! அதிலே கூட சந்தேகம் வந்துடுச்சா! சொல்றேன் கேட்டுக்குங்க! நல்ல வேளையா அன்னிக்கு பதினோரு மணிக்கு நான் ஏர் போர்ட்டிலே இருந்தேன். ஹாங்காங் தொழிலதிபர் வந்திருந்தார். அவரை வரவேற்று ஓட்டலிலே கொண்டு போய் விட்டு, ஆபீஸ் திரும்ப ஒரு மணி ஆச்சு! சீனாக்காரர் அவர்! இன்னும் ஓட்டல்லே இருக்கார் விசாரியுங்க!

“ஏண்டா! நீ அமைச்சர் பையன்னு தான் தெரியுமே... அதுக்காக ‘புரட்சித் தலைவி ஆசியுடன் தேர்வு எழுதுகிறேன்’னு எழுதணுமா என்ன?”

-குடந்தை சிட்ரா

-மத்தியானம்!

-ரெண்டு மணிக்கு அடையார் மெடிகல் இன்ஸ்டிடியூட் டாக்டர் கோபால் வந்திருந்தார். நாலு மணிக்குத்தான் போனார்.

—ஸார்! உண்மைதான் ஸார்! அன்னிக்கு ரெண்டு மணிக்கு போயிருந்தேன்! நாலு நாலேகாலுக்குத்தான் திரும்பினேன். மெடிகல் எக்விப்மெண்ட் விஷயமா பேசுவதற்குப் போனேன்! பிருதிவி ரொம்ப நல்லவர் ஸார்! இத மாதிரி அநியாயமா அவரை... என்று இழுத்தார் கோபால்.

-ஸார்! அவர் அந்த மோட்டலுக்குப் போனதுனாலேதான் விசாரணைகள் பண்றோம் ஸார்! என்றார் இன்ஸ்பெக்டர்.

-சரி ஸார்! அவர் மோட்டலுக்குப் போனதுக்குக் காரணம் இருந்திச்சு. அது எனக்கும் தெரியும்.

-எப்படித் தெரியும்?

-பிருதிவி ரூம்லே நானும் அவருந்தான் இருந்தோம்! அவர் டாய்லெட்டுக்குப் போனார். அப்போ போன் வந்திச்சு! நான் தான் எடுக்க வேண்டி வந்திச்சு! ஹலோ சொன்னேன். ‘மிஸ்டர் பிருதிவி! நான் ஒரு ஆபத்திலே இருக்கேன்! நீங்க...’ன்னு ஒரு பெண் குரல் புலம்பற மாதிரி ஆரம்பிச்சுது! ‘இருங்க மேடம், பிருதிவி இப்போ வந்துடுவார்’னு கீழே வச்சேன்.

-அப்புறம் பிருதிவி வந்து பேசினாரா!

-அரை நிமிஷத்திலே திரும்பி வந்து பேசினார்! கவலையோடு என்ன என்னன்னு கேட்டாரு! அவள் சொல்லலை போல இருக்கு! ‘சரி ஏழுமணிக்கு வரேன்’னு வச்சுட்டாரு! எனக்கும் அந்த சமயத்திலே ஆபத்தைச் தெரிஞ்சுக்கக ஆவலாகத்தான் இருந்திச்சு! ஆமாம். அது என்ன ஆபத்து ஸார்?

இன்ஸ்பெக்டர் உடனே எழுந்தார். ஏதோ தீர்மானத்துக்கு வந்தவர் போல இருந்தது.

—இந்தப் பாருங்க சேகர்! ஆதாரத்தோடு வந்திருக்கேன். நீங்க தப்ப முடியாது!

நடந்த உண்மையைச் சொல்லிடுங்க! என்றார் இன்ஸ்பெக்டர்.

–எந்த அசம்பாவிதமும் நடக்கலை! நானும் அருணாவும் சந்தோஷமாகத்தான் வாழ்ந்து வந்தோம், என்றான் சேகர்.

–அதுவே பொய்! உங்களுக்கு ஏற்கெனவே பல பெண்கள் தொடர்பு உண்டு, அருணா உங்களோடு சேர்ந்ததிலிருந்து அடிக்கடி சண்டைதான் போட்டீங்கன்னு பலபேர் சொல்லிட்டாங்க. நான் இங்கே விசாரிச்சாச்சு.

–அதெல்லாம் பொய் ஸார்! நானும் அருணாவும் கல்லூரியிலேர்ந்து காதல் செய்யறோம்!

–அதெல்லாம் தெரியும்!

–சரி, நீங்க வெள்ளிக்கிழமை அந்த மோட்டலுக்கு வந்திருக்கீங்க! அருணாவை மூணு மணி சுமாருக்கு வெளியிலே அழைச்சிட்டுப் போயிருக்கீங்க! உண்மையா இல்லையா?

–இல்லை இல்லை! சத்தியமா இல்லை.

–அவளை அழைச்சிட்டுப் போயிருக்கீங்க-உங்க கார்லே!

–என் காரா!

–ஆமாம்! உங்க கார் தான்! பெங்களூர் திரும்பின உடனே ஒர்க்ஷாப்பிலே விட்டிருக்கீங்க! நான் அதைப் பார்த்துட்டுத்தான் வரேன்.

ஒரு கணம் சேகர் உறைந்து கிடந்தான்.

–உங்க கார் டயரின் தடத்தை நான் மெட்ராஸிலேர்ந்து குறிச்சிட்டு வந்திருக்கேன்! அந்த மோட்டலைத்தாண்டி மூணு பர்லாங்கிலே ஒரு செடி மண்டிக்கிடக்கிற இடத்திலே ஓரமாய்ப் போய் காரை நிறுத்தி, அருணாவோட பாஸ் புக்கை கிழிச்சி எறிஞ்சிருக்கீங்க! நீங்க ஓரமாப் போய் நின்னதுனாலே மண் தரையிலே உங்க கார் டயர்த்தடம் பதிஞ்சு இருந்திச்சு! அதைப் படிவம் எடுத்துட்டு வந்து இங்கே உங்க கார் டயரையும் பார்த்தாச்சு! ரொம்ப பொருத்தமா ஒத்து இருந்திச்சு!

–அத மாதிரி டயர் ஆயிரம் காரிலே இருக்கும்!

–அது ஒரு தடயம் இல்லை. பாங்கிலே போய்ப் பேசினதிலே அருணா பாஸ்புக்கிலே பிளாஸ்டிக் உரை இருக்கும்னு தெரிஞ்சது. அதைத் தேடி திரும்பி வந்து, அதே இடத்தைக் கோதி எடுத்து, அந்தக் கவரையும் கண்டு பிடிச்சாச்சு! அதிலே இருந்த உங்க கை விரல் ரேகையும் பதிஞ்சாச்சு!

சேகரது பேச்சு நின்றுவிட்டது.

–இப்போ உங்க கைரேகையைப் பதிவு செஞ்சு பார்த்தா, அந்த கவர் கைரேகையோடு ஒத்துப்போகும்... பார்க்கட்டுமா?

–அதனாலே என்ன ஸார்! அவளை நான் எதுவும் செய்யலை! அவ்வளவுதான்.

–அதுவும் ஓரளவு உண்மைதான். அருணாவை காட்டேஜிலே சந்திச்சு, சமாதானம் பேசறாப்போலே பேசி வெளியிலே அழைச்சிட்டுப் போயிருக்கீங்க ஒரு தனி இடத்திலே காரை நிறுத்தி, அவளுக்கு டிரிங் கொடுக்கிற பாவனையிலே ஸ்ட்ராங் காக்டெயில் ஊத்திக் கொடுத்து, அவளை மயக்கமாக்கிட்டீங்க. அப்புறம் காரிலேயே அவளைப் படுக்க வச்சீங்க! மோட்டாரை ஸ்டார்ட் செய்து ஓடவச்சு பின்னாலே வருகிற அந்த எக்ஸாஸ்ட் புகையை ஒரு ரப்பர் குழாய் வழியே காருக்குள்ளே கொண்டு போய் அவ முகத்துப் பக்கத்திலே போட்டு வச்சீங்க! நீங்க வெளியே நின்னுகிட்டு கார் ஜன்னல், கதவு எல்லாத்தையும் மூடிட்டீங்க! மூணு நாலு மணி நேரம் அருணாவை நச்சு வாயுவை சுவாசிக்க வச்சுக் கிடத்தட்ட கொன்னுட்டீங்க! அப்படிச் செஞ்சது உங்க புத்திசாலித்தனமான உத்தி!

–பொய்! பொய்!

–அலட்டாதீங்க! நீங்க உபயோகிச்ச ரப்பர் குழா உங்க டிக்கியிலே இருந்திச்சு! வொர்க் ஷாப்பிலே உங்க காரைக் கண்டு பிடிச்சப்போ கிடைச்சது.

சேகர் பேசுவதற்கு வாய் எடுத்தான்.

–இருங்க! அப்புறம் ஏழு மணி சுமாருக்கு அவளை மோட்டலுக்குக் கொண்டு வந்து... மார்பிலே சாய வச்சே நடத்தி அறையிலே கொண்டு வந்து விட்டுட்டீங்க!

உங்க குற்றத்தை மறைக்கிறதுக்காக, மோட்டல் அறையில் இருந்த விளக்குத் திரியை நல்லா ஏற்றி, நிறைய புகை கக்க வச்சீங்க! இவ்வளவு விஷயம் சொல்லியாச்சு போதுமா?

குற்றத்தை ஒத்துக்கிடுங்க சேகர்! உங்க கையை எடுங்க! ரேகையைப் பதிவு செய்யலாம்!

அடுத்த விநாடி சேகர் திடும் என்று எழுந்து வெளி நோக்கி இரண்டு தாவல் தாவினான்.

இன்ஸ்பெக்டர் சிரித்தார்.

வாசலில் எதிர்பார்ப்புடன் மஃப்டியில் நின்ற அவரது ஆட்கள், சேகரை வரவேற்றுக் கொண்டார்கள்.

(முற்றும்)



# பா. ராகவன்

கவுண்ட்டரில் தூங்கி அணிந்த, பீடி கடித்த முன்நாடி. வாலிபர்கள் புலம்பிக் கொண்டிருந்தார்கள். நாசமாய்ப் போகிற வர்கள் விலை ஏற்றி விட்டார்கள். டிக்கெட் விலை. பத்து ரூபாய் டிக்கெட், பதினாறு ஆகிவிட்டது. பன்னிரண்டரையெல்லாம் இருபதாகிவிட்டது. தலைவர் படமாக இருப்பதால் மட்டுமே புலம்பிக் கொண்டாவது நிற்க வேண்டியிருக்கிறது. வேறு சாமானியரின் படமாக இருக்கிற ப ் த்தில் வந்திருக்கப் போவதில்லை. மூன்று மணி வெயில் பொறுக்கவில்லை. கவுண்டரைத் திறங்கடா, பொறுக்கிப் பசங்களா.

பெரியவர் சுந்தரமூர்த்தி, நபர்கள் அலையும் படிக்கட்டுகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து, மேல்துண்டால் ஒருதரம் தட்டி, உட்கார்ந்தார். வாழ்க்கையில் ரொம்ப நாள் கழித்துப் படம் பார்க்க வந்திருக்கிறார். எதிர் வீட்டு பச்சையப்பன் கல்லூரி தந்த ரசிகர் மன்ற டிக்கெட்...

தலைவர் படம், ஃபர்ஸ்ட் டே போய்ப் பாருங்கள் தாத்தா. வாழ்வில் அப்படி ஓர் அனுபவம் இதுவரை சந்தித்திருக்க மாட்டீர்கள். தவறாமல் கொஞ்சம் பஞ்சு கொண்டு போவது நலம். உச்சபட்ச டெஸிபல் விஸில் புரட்சியில் உங்கள் காதுகள் பழுதாகிவிடக் கூடும்.

பெரியவர் சுந்தரமூர்த்தி சிரித்துக் கொண்டார். ஒரு காலத்தில் அவரும் தியேட்டரில் உக்கிரமாக விஸில் அடித்தவர்தான். தலைவர் படம், முதல் நாள், முதல் ஷோ அனுபவம் அவர் அறியாததல்ல. அவ்வப்போது தலைவர்கள் மாறி வருகிறார்கள். ஆனால் ரசிகர்கள் அப்படியேதான் இருக்கிறார்கள். முதல் நாள் விஸில் புரட்சியும்...

பெரியவர் சுந்தரமூர்த்தி, ஸ்டூல் போட்டு உட்கார்ந்திருந்த காவலனிடம் தனது ரசிகர் மன்ற டிக்கெட்டைக் காட்டிவிட்டு உள்ளே நுழைந்தார்.

அவர் காலத்தில் தியேட்டர்களில் இத்தனை நவீனம் இல்லை. வழுக்கும் தரை. எங்கிருந்து வருகிறது என்று லேசில் கணித்துவிட முடியாத ஒருவித ஓடிகொலன் வாசனை. உயரமான ஸீலிங் மூலைகளிலிருந்து தப்பிவரும் மெல்லிய இசை.

வாழ்க்கை, அனுபவிப்பதற்கானது. சின்னச் சின்ன சந்தோஷங்கள். பெரியவர் சுந்தரமூர்த்தி ஒரு தேர்ந்த ரசிகர். துவைத்து, இஸ்திரி போட்ட வெள்ளை நிற வேட்டி, சட்டை. களையான முகத்துக்கு எடுப்பான திருநீறு. கையில் தடி, ஊன்றுவதற்கல்ல. வயசு காலத்தில் அது ஒரு கம்பீரம்.

கிளம்பும்போது மனைவி சொன்னாள் : "ஒரு வார்த்தை காதில் விழாது. கலாட்டா நடக்கும்."

நடக்கட்டுமே! விசில் அடிப்பார்கள். அடிக்கட்டுமே! வாகான இருட்டு மூலை கிடைத்தால் தானும் ஒருதரம் முயன்று பார்க்க முடிவு செய்து கொண்டார். உய், உய்ய், தலைவா, தூள்!

உற்சாகம், எத்தனை உன்னதமான விஷயம்! வினாடிப் பொழுதில் சடசடவென்று நாலைந்து வயது உதிர்ந்துவிட்டது போல் உணர்ந்தார்.

உள்ளே கும்பல் வர ஆரம்பிக்க, பெரியவர் 'என்ட்ரி'யில் இருந்தவனிடம் டிக்கெட்டைக் கொடுத்து, பாதி கிழித்து வாங்கிக் கொண்டு அரங்கில் நுழைந்தார்.

சில்லிட்ட சீட்டுகள், எங்கே ஸி-11? ஆஹா சுவரோரம். ஆண்டவன் வாழ்க. அழுக்கு வெளிச்சத்தில் இதமான சங்கீதம். ஆங்காங்கே ரசிகக் குஞ்சுகள். நிமிஷங்களில் இருக்கைகள் மனிதர்களால் நிரம்ப, திரை உயர்ந்து, நல்வரவு. நோ ஸ்மோக்கிங். பிலிம் டிவிஷன். பீகாரில் மழை. மெயின் பிக்சருக்கு வாய்யா சீக்கிரம்.

பெரியவர் சுந்தரமூர்த்தி யதேச்சையாகத் திரும்பிப் பார்த்தார். பின்வரிசையில் நேர் பின்னால் இரு காதல் சிட்டுகள். காதோரப் பேச்சு. உதட்டோரப் புன்முறுவல். விரலோரச் சீண்டல். விழியோர வெட்கம்.

அவர் சுவாரசியமானார். என்ன சந்தோஷம்! படபடப்போடு கூடிய என்ன உற்சாகம்! பயத்தோடு கூடிய என்ன பரவசம்! கொஞ்சம் திகில். கொஞ்சம் சுகம். இங்கே விறுவிறுப்பு. அங்கே கிறுகிறுப்பு.





அவருக்கு, சீக்கிரம் விளக்கணைக்க மாட்டார்களா என்றிருந்தது.

அடுத்தவர்களின் உறுத்தல் பார்வை அவர்களுக்கு எத்தனை சங்கடமாயிருக்கும்? தவிர, தெரிந்தவர்கள் யாரும் பார்த்துவிட்டால் எத்தனை சிக்கல்?

காதல், எத்தனை சுகமான கஷ்டம்? பெரியவர் சுந்தரமூர்த்தி, தன் துளிர்மீசை நாட்களை நினைத்துப் பார்த்தார். வீணை கிளாஸுக்குப் போன நாட்கள். உருவம் அவருக்கு ஞாபகமில்லை. ஒரு இரட்டைப் பின்னல். அவருக்கு ஜூனியர். சீனியர் என்கிற முறையில் தந்தி மாற்றித் தரும் சமயங்களில் பட்டும் படாமலும் அவள் கரங்களில் உரசிப் போகும் தன் விரல்கள்... அவளைத் தான் அவர் எப்படிக் காதலித்தார்? நிசப்த இரவுகளில் தூக்கம் வராமல், அவளுக்காக ஏங்கி, அழுது...

கடைசி வரை அவளுடன் பேசுகிற தைரியமே வரவில்லை அவருக்கு. அவள் பார்க்காத போது அவசரமாய் ஒரு தரம் பார்த்துவிட்டுக் கண்ணை இறுக்கி மூடிக் கொண்டு விடுவார்.

என் கண்ணில் உன்னைச் சிறைப்பிடித்து விட்டேன் பார்!

பின்னாளில் திருமணமாகி, மனைவி ஒன்றும் கோபித்துக் கொண்டு ஓடிவிட மாட்டாளென்ற தைரியம் வந்தபோது, ஒரு வாகான இரவில் இதைச் சொன்னபோது, "ஐயே, என் ஆம்பளையே!" என்று சிணுங்கலாகக் கிண்டல் செய்தாள்.

கிண்டல்.... எத்தனை கவித்துவமான வெளிப்பாடு அது!

**லைட்** அணைத்து, சர்டிஃபிகேட் போட்டார்கள். தொடர்வதாக சமர்ப்பணம். எங்களை வாழவைத்த தெய்வம் ஸோ அண்ட் ஸோவிற்கு ஊதுபத்தி, தேங்காய், டசன் பழத்துடன்....

முதல் சீனில் முன்வரிசை ரசிகர்கள் சில்லறை பறக்க விட்டார்கள். தொடர்ந்து காகித ஏவுகணை. விசில், விசில், விசில். பெரியவர் சுந்தரமூர்த்தி மெல்லப் புன்னகை செய்தார். இது ஹீரோக்களின் காலம். அசைவுகளில் முத்திரை பதிக்கும் ஹீரோக்கள். அந்தக் காலம் போல் கனமான மேக்அப்



இல்லை. வரைந்த கிருதா இல்லை. டைட் குளோசப் உதடுகளைக் காட்டி பிரமிப்பூட்டு கிறார்கள். சே, எத்தனை சினிமா பார்க் காமல் விட்டுவிட்டோம்?

ஒரு நீள வசனக்காட்சியில் தியேட்டர் மௌனம் காக்க, பின் ஸீட் ஜோடி கிசுகிசுத் தது. "தேன்மொழி." அது அவள் பெயராக இருக்கலாம். இந்தப் பையன் என்ன மென் மையாக, காற்றைக் கலைக்காமல் கூப்பிடு கிறான்?

"ஏனாம்?" பெண்ணின் சிணுங்கல்.

பெரியவர் சுந்தரமூர்த்தி சுவாரஸ்யமா னார். வாழ்க்கையில் காதல் வாய்த்தவர்கள் எத்தனை அதிர்ஷ்டசாலிகள்! காதலர்கள், முதன் முதலில் எப்படித் தம் காதலை வெளி யிட்டிருப்பார்கள்? சினிமாக் காதல் மாதிரி நிஜம் அத்தனை சுலபமில்லை என்பது தெரி கிறது. ஆனால் நிஜத்தின் உருவம்தான் என்ன?

பெரியவர் சுந்தரமூர்த்திக்குப் பின் சீட் காத லர்கள்மேல் இனம் புரியாத பாசம் வந்தது. கடவுளே! இந்தச் சின்னவர்களின் சந்தோ ஷத்தை நீடித்து வைத்திரு. அவன் ஏமாற்றுக் காரனாக இல்லாமல் இருக்கட்டும். அந்தப் பெண் துணிச்சலுள்ளவளாயிருக்கட்டும். அவர்கள் பெற்றோர், பரந்த நோக்கு உள்ள வர்களாக இருக்கட்டும்.

சட்டென்று பின்னாலிருந்து ஒரு சிணுங் கல். "சீ, வலிக்கறது, விடுடா."

பெரியவருக்கு முகம் சிவந்துவிட்டது. வெட்கம். சே, நான் ஏன் படத்தைக் கவ னிக்க மாட்டேனென்கிறேன்?

இன்டர்வெல். ஒரு பாப்கார்ன் பாக் கெட்டை வாங்கிக் கொண்டு பெரியவர் சுந்தரமூர்த்தி இருக்கைக்கு வந்தார்.

"என்ன ஒரு நியூஸென்ஸ் சார்? பப்ளிக் ப்ளேஸ்ல அக்கிரமம் பண்றாங்க. இவங்க கொஞ்சறதுக்குத் தியேட்டர்தான் கிடைச் சுதா?"

குமுறும் பக்கத்து சீட். பெரியவர் சுந்தர மூர்த்தி மௌனம் காத்தார். அவர் எதிர்க் கட்சி. காதலர்கள் கொஞ்ச, பார்க், பீச்சை விட தியேட்டர் சௌகர்யம். சகிப்புத் தன்மை முக்கியம். உன் வழியை நீ பார். அவர் கள் வழி அவர்களுக்கு. உனக்கென்ன இடைஞ்சல்? ஏன் பொருமுகிறாய்? ஜெலஸி? அது. அதுதான் காரணம். தனக்கு வாய்க்காத அனுபவம்.

பெரியவர் பதில் சொல்லாததால் பக்கத்து சீட் வாய் மூடிக் கொண்டது. லைட் அணைத்து படம் தொடங்க, மறுபடி சிணுங் கல், மறுபடி மென்மொழி. 'ஐயோ, படம் பார்க்க விடேன்?'

"எழுந்து சொல்லிடலாம்னு பார்க் கிறேன், சார்."

மறுபடியும் பக்கத்து சீட். பெரியவர் சுந்தர

## ஜே. கே : நூற்றாண்டு சிந்தனை

நான் பிறந்த கணத்திலிருந்து எனக் கொரு பெயர், எனக்கொரு ஜாதி, எனக் கொரு மதம் என்று எனது சமூகத்தின் சம்பிர தாயப் பொய்களாலேயே 'நான்' என்கிற எனது சுயம் உருவாக்கப்படுகிறது. எனது சுயத்தின் எலும்பும் சதையுமாக இருப்ப தெல்லாம், எனக்குள் மற்றவர்கள் திணித்த பொய்களும் பிறகு எனக்கு நானே சுவீக



ரித்துக் கொண்ட பொய்களும் தவிர வேறல்ல!

இப்படி, எனது சுயமே பொய்களின் குவியல்களுக்குள் சிறைப்பட்டுக் கிடக்கிற போது, அந்தச் சுயம் உருவாக்குகிற புற வுலக உறவுகளில் - மாற்றங்களில் - உண்மை யான சுபிட்சத்தையும் ஆனந்தத்தையும் நான் எப்படிப் பெற்றுவிட முடியும்?

எனவே, எனது விடுதலைக்கான, ஆனந் தத்திற்கான மெய்யான ஆயுதம் எனது விழிப்புணர்வுதான். இந்த விழிப்புணர்வின் வெளிச்சத்தில் மட்டும் தான் எனது சுயத் தின் பொய்யான வேஷங்களைக் கண்டு கொள்ள முடியும். இந்தப் பொய்யான வேஷங்கள் கலையும்போதுதான் உண்மை தரிசனமாகிறது. ஒவ்வொரு தனி மனித னும் இந்த தரிசனத்தைப் பெறுகிற போது தான் அவர்களால் உருவாக்கப்படுகிற சமு தாய மாற்றங்களும் உயிர்ப்புள்ளவையாக, பேரானந்தம் தருபவையாக அமைகின்றன...

— ஜே. கிருஷ்ணமூர்த்தி

மூர்த்தி, புன்னகையுடன் அவர் கைகளைப் பற்றினார்.

"வேண்டாமே?"

"ஏன்?"

"கோலத்தை லாரி ஏற்றி அழிப்பது மாதிரி ஆகிவிடும்."

பக்கத்து சீட் நபர் அதிர்ந்து இருந்தார். இருட்டில் பெரியவர் சுந்தரமூர்த்தியின் உருவம் தெரியவில்லையெனினும் இன்டர்வெல் வெளிச்சத்தில் அவர் பார்த்திருக்கிறார். அறுபது வயது இருக்குமா? ஒரு தடி பிடித்த கிழம் பேசுகிற பேச்சா இது? காலம் கெட்டுவிட்டது. இந்த நாடு உருப்பட சான்ஸே இல்லை.

கிளைமேக்ஸ் ஆரம்பித்துவிட்டதைத் திரையில் விரையும் கார்களும் இரையும் இசையும் சொல்லின. அதுவரை கஷ்டப்பட்டு மௌனமாயிருந்த பக்கத்து சீட் மறுபடியும் பேச ஆரம்பித்தார்.

"ரெண்டு பெண்களைப் பெற்றவன் சார் நான்! என் மாதிரி பெற்றோர்களின் பிரதிநிதியாக நான் இதைப் பார்க்கிறேன்! இதை எப்படித் தவறில்லை என்பீர்கள்?"

பெரியவர் சுந்தரமூர்த்தி மௌனமாக அவரைப் பார்த்தார். பதிலேதும் பேசத் தோன்றவில்லை.

படம் விட்டு வெளியே வந்தார். இரைச்சல் ஆட்டோக்கள். புழுக்கம். நெரிசல். ஒரு காப்பி சாப்பிட்டால் தேவலாம் போலிருந்தது.

எதிரே ஹோட்டல். நுழைந்து, அமர்ந்தார். காப்பி சொல்லிவிட்டுத் தற்செயலாக இடப்புறம் திரும்ப, அதே சிட்டுகள்.

பெரியவர் உற்சாகமானார். 'பிள்ளைகளா, நன்னா இருங்கோ.'

மானசீக ஆசிர்வாதம்.

கடவுளுக்கு நன்றி. ஏனையோரைப் போலன்றி ஒரு மாறுபட்ட பார்வையை எனக்குத் தந்திருக்கிறாய். மகத்தான, ஆரோக்கியமான பார்வை.

காப்பி வந்தது. அருந்தி, எழுந்தார். ஜோடி, பைக்கில் வந்திருந்தது. அவன் ஸ்டார்ட் பண்ண, அவள் பின்னால் ஏறி, இடுப்பை வளைத்துக் கொண்டாள்.

ஒரு புயலாய் பைக் சீற, பெரியவர் சுந்தரமூர்த்தி, மனத்துக்குள் டாட்டா சொன்னார்.

ஒருவேளை தனக்கொரு பிள்ளையோ, பெண்ணோ இருந்திருந்தால் தன் பார்வையும் வேறுவிதமாகத்தான் இருந்திருக்குமோ என்று அவருக்குத் தோன்றியது.

சட்டென்று, அதுவரை மனத்தில் ஊறியிருந்த உற்சாகம் வடிந்துவிட்டதுபோல் பட்டது. மெல்ல நடக்க ஆரம்பித்தார்.

கம்பீரத்துக்கு மட்டுமல்ல; சமயத்தில், ஊன்றுவதற்கும் தடி தேவைப்படத்தான் செய்கிறது.



# நரை

❑ நரை
காலத்தின் கவிதை
இதற்கு
எத்தனை எத்தனைஉரை!

❑ அலை நரைக்க
சந்தோஷம் பொங்கும்.
மலை நரைக்க
பனி தூங்கும்!

❑ விண் நரைக்க
விடியல் பிறக்கும்
மண் நரைக்க
மழை இறங்கும்!

❑ முதிர்கன்னியின் நரை
பெருமூச்சுகள் பின்னும்
'நூலாம்படை'!

❑ காதோரம் நரை
காலத்தின் கேலிநகை!

❑ தலை எங்கும் நரை
முதுமை சூட்டும்
ஜரிகை பரிவட்டம்

❑ இந்த நரை
காலம் வெளியிடும்
வெள்ளை அறிக்கை

❑ இந்த ஊமை விமர்சனம்
உதறியவர் அழியும்கிழம்
உணர்ந்தவர் அறிவுப் பழம்

- ஜனநேசன்



# கடவுள்
## கவனித்துக் கொண்டிருக்கிறார்!

கண் புற உலகத்தைப் பார்க்கிறது,
மனம் கண்ணைப் பார்க்கிறது.
அந்தராத்மா மனத்தைப் பார்க்கிறது,
இது உண்மை; மாற்ற முடியாத உண்மை
மனசாட்சிக்கு ஏற்ப நாங்கள் சுத்தமான
ருசிகரமான இனிப்பு மற்றும் கார
வகைகளைத் தயாரிக்கிறோம்.

**இனிப்பு வகைகள்:**

1. மங்களூர் போளி
2. தேங்காய் போளி
3. ரஸ மலாய்
4. ஸோன் பப்டி கேக்
5. மாலாடு ரவாலாடு
6. இனிப்பு ஸோமாஸ்
7. முந்திரி கத்லி
8. கடலை உருண்டை
9. பொரிவிளங்காய் உருண்டை
10. தேங்காய் கோவா
11. அதிரசம்
12. வெல்ல சீடை
13. சூரத்காரி
14. கோதுமை ஹல்வா
15. ரஸகுல்லா
16. குங்குமபூ லட்டு
17. குங்குமபூ பாதம் ஹல்வா
18. குங்குமபூ வீட் ஹல்வா
19. புரூட் ஹல்வா
20. சூரியகலா

**கார வகைகள்:**

1. தட்டை
2. தேன்குழல்
3. கைமுறுக்கு
4. சீடை
5. ஸ்பெஷல் மிக்ஸர்
6. நவரத்ன மிக்ஸர்
7. உருளைக்கிழங்கு சிப்ஸ்
8. வாழைக்காய் சிப்ஸ்
9. வறுபயறு
10. வெஜிடபிள் சமோசா
11. ரயில் கட்டிடம்
12. சீப்புச் சீடை

**பொடி வகைகள்:**

1. கருவேப்பிலைப் பொடி
2. பருப்புப் பொடி
3. இட்லிப் பொடி
4. சாம்பார்ப் பொடி
5. ரசப் பொடி
6. ஊறுகாய் மிளகாய்ப் பொடி

திருமண வைபவங்களுக்கு, பருப்புத் தேங்காய் அதிரசம், திரட்டுப்பால், சீர் முறுக்கு ஆகியவற்றை தயாரித்துக் கொடுக்கிறோம்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு,
சென்னை-600 020 போன்: 412557

Ad-Ventures

# பார்த்திபன் கனவு

## 24. மாரப்பனின் மனக் கலக்கம்

பொன்னனையும் வள்ளியையும் நள்ளிரவில் மாரப்ப பூபதி தொடர்ந்து போன காரணம் என்ன? இதை அறிந்து கொள்வதற்கு நாம் மறுபடியும் அன்று சாயங்கால நிகழ்ச்சிகளுக்குப் போக வேண்டும்.

சக்கரவர்த்தியின் சந்நிதியிலிருந்து வெளியேறிய போது மாரப்பன் அளவில்லாத மனச்சோர்வு கொண்டிருந்தான். சாம்ராஜ்யத்திற்காகத் தான் செய்த சேவையெல்லாம் இவ்விதம் பிரதிபலன் இல்லாமற்போகும் என்று அவன் எதிர்பார்க்கவேயில்லை. பார்த்திபன் போர்க்களத்தில் மாண்டு ஏறக்குறைய ஏழு வருஷமாயிற்று. அந்தப் போரில் தான் கலந்து கொள்ள மறுத்ததற்காகவே உறையூர்ச் சிம்மாசனம் தனக்குக் கிடைக்குமென்று மாரப்பன் எதிர்பார்த்தான். அந்த ஆசை நிறைவேறவில்லை. அதனால் அதிருப்தியோ, வெறுப்போ கொண்டதாக அவன் காட்டிக் கொள்ளவில்லை. பல்லவ சாம்ராஜ்யத்தில் அவனுடைய பக்தி குன்றியதாகவும் தெரியப்படுத்தவில்லை. தன்னுடைய உண்மையான சாம்ராஜ்ய சேவைக்கு ஒரு நாள் நிச்சயம் பலன் கிட்டும் என்ற நம்பிக்கையுடன் அவன் வருஷக்கணக்காகக் காத்திருந்தான். கடைசியாக, விக்கிரமனுடைய சதியாலோசனையைப் பற்றி அவனுக்குச் செய்தி தெரிந்த போது, தளபதி அச்சுதவர்மரிடம் உடனே சென்று தெரியப்படுத்தினான். அதன் பலனாக அச்சதியாலோசனையை முளையிலேயே கிள்ளி எறிவது சாத்தியமாயிற்று. இதன் பிறகாவது, தன்னுடைய சேவைக்குத் தகுந்த சன்மானம் கிடைக்குமென்று அவன் நிச்சயமாக நம்பியிருந்தான். அவன் ஆசைப்பட்டது பல்லவ சக்கரவர்த்திக்குக் கப்பம் செலுத்திக் கொண்டு உறையூரை ஆளும் பதவிதான். இது உடனே கிடைக்காவிட்டாலும், தான் முன்னர் வகித்து வந்த சேனாபதி பதவியாவது கிடைக்குமென்று நினைத்தான். ஆனால், நடந்தது என்ன? சக்கரவர்த்தி தன் பேரிலேயே சந்தேகம் கொள்ளலாயிற்று. கேவலம் ஒரு ஓடக்காரன் - அவன் பெண்டாட்டி - இவர்கள் முன்னிலையில் சோழ நாட்டுப் பட்டத்துக்கு உரியவனான தான் அவமானப்பட நேர்ந்தது.

இதை நினைத்த போது மாரப்பனுடைய நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. "இது என்ன உலகம்? இது என்ன வாழ்வு?" என்று உலகத்தையே வெறுக்கும் வழியில் மனம் திரும்பிற்று. எங்கே போகிறோமென்ற சிந்தனையே இல்லாதவனாய்க் குதிரை போன வழியே போக விட்டுக் கொண்டிருந்தான். அறிவுமிக்கப் பிராணியான குதிரை தன் எஜமானனுடைய மனநிலையை உணர்ந்து மந்தநடையுடன் யதேச்சையாகப் போய்க் கொண்டிருந்தது. உறையூரின் வீதிகளில் அங்குமிங்குமாக அது சிறிது நேரம் சுற்றி விட்டுக் கடைசியில் காவேரிக் கரையை அடைந்தது. பிறகு காவேரிக்கரைச் சாலையோடு கிழக்குத் திக்கை நோக்கிச் செல்லலாயிற்று.

சூரியன் அஸ்தமித்தது. அன்று சுக்ில பட்சத்துச் சதுர்த்தியாதலால் மேற்குத் திசையில் நாலாம் பிறை தோன்றிற்று. வானத்தில்

அமரர் கல்கி

## அருள் வாக்கு

கீதையில் அர்ஜுனன் குறுக்கே குறுக்கே எத்தனை 'கொஸ்சின்' பண்ணுகிறான்? சிஷ்யன் கவனமாக குரு உபதேசத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறான் என்பதற்கு இந்தக் குறுக்குக் கேள்வி பெரிய ஸாக்ஷி.

'லெக்சர்' என்று முழுக்க 'ப்ரிபேர்' பண்ணிக் கொண்டு போய் அதை ஒப்பித்து விட்டு வந்து விடலாம் என்று ஒரு ப்ரொஃபஸர் இருக்கிறவரையில் அவர் ஸப்ஜெக்டை ஸாங்கோபாங்கமாகப் பார்க்க வேண்டிய கட்டாயமில்லை. தம்முடைய அபூர்ண ஞானத்தைக் கொண்டே எல்லாம் தெரிந்த மாதிரி லெக்சர் கட்டி ஏமாற்றி விட முடியும். பரிப்ரசநம் என்று நடுநடுவே தோண்டித் தோண்டிக் கேள்வி கேட்குமாறு மாணவனை விடும் போதுதான் லெக்சரரும் ஸப்ஜெக்டைப் பூர்ணமாகப் பார்த்துப் புரிந்து கொள்ள வேண்டியதாகும். அவர் 'மிஸ்' பண்ணி விட்ட விஷயம் ஏதாவது இருந்தால் அது சிஷ்யனின் பரிப்ரசநத்தில் வெளிப்பட்டு விடும். அவர் அதற்கு மேலே அதற்கான புஸ்தகங்களைப் பார்க்க இடமேற்படும்.

நட்சத்திரங்கள் ஒவ்வொன்றாய்த் தோன்றி மினுக்கத் தொடங்கின. சற்று நேரத்துக்கெல்லாம் வானவெளி முழுவதிலும் கோடிக் கணக்கான வைரங்களை வாரி இறைத்தது போல் நட்சத்திரங்கள் பொறிந்து கிடந்தன. மாரப்பன் இந்த வான விசித்திரம் ஒன்றையும் கவனியாமல் ஏதேதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். அரைக்காத வழி இவ்விதம் போன பிறகு அவன் திடுக்கிட்டுச் சுய நினைவு வந்தவனாய் எங்கே போகிறோமென்று ஆராய்ந்தான். இதற்குள் நாலாம் பிறைச் சந்திரன் மேற்கு வானத்தின் அடிப் பாகத்துக்கு வந்து விட்டது. குதிரையைத் திருப்பி உறையூர்ப் பக்கம் செலுத்தினான்.

உறையூர்க் கோட்டை வாசலைத் தாண்டி உள்ளே சிறிது தூரம் அவன் சென்ற போது, எதிரே அநேக தீவர்த்திகளுடனும், சங்கம் முதலிய வாத்திய முழக்கங்களுடனும் ஒரு கூட்டம் வருவதைக் கண்டான். கூட்டத்தின் மத்தியில் சிங்கக் கொடி பறந்ததைப் பார்த்த போது, ஒருவேளை சக்கரவர்த்தி தன் பரிவாரங்களுடன் ஸ்ரீ ரங்கநாதர் ஆலயத்துக்குப் போகிறாரோ என்று நினைத்துச் சட்டென்று குதிரையிலிருந்து இறங்கிச் சாலை ஓரமாக அடக்க ஒடுக்கத்துடன் நின்றான். கூட்டம் அருகில் வந்த போது அதில் சக்கரவர்த்தி இல்லையென்பது தெரிந்தது. தளபதி அச்சுதவர்மரும், அவருக்குப் பக்கத்தில் தலை மொட்டையடித்த ஒரு சாமியாரும் வந்து கொண்டிருந்தார்கள். அந்தச் சாமியார் திடகாத்திர தேகமுடையவராயும் முகத்தில் நல்ல தேஜஸ் உடையவராயுமிருந்தார். மாரப்பனுடைய மனத்தில் மின்னலைப் போல் ஒரு எண்ணம் உதித்தது. "ஒருவேளை இவர்தான் அந்த ஜடாமகுடதாரியான கபட சந்நியாசியோ?" என்று நினைத்தான். அதே சமயத்தில் தளபதி அச்சுதவர்மரின் பார்வை மாரப்ப பூபதியின் மீது விழுந்தது. அவர் பூபதியைச் சமிக்ஞையினால் அருகில் அழைத்து, பக்கத்திலிருந்த சிறுத்தொண்டரை நோக்கி, "அடிகளே! இவன் யார் தெரிகிறதா? பார்த்திப மகாராஜாவின் சகோதரன் மாரப்ப பூபதி!" என்றார்.

சிறுத்தொண்டர் மாரப்பனை ஏற இறங்கப் பார்த்தவண்ணம், "அப்படியா? வெகு காலத்துக்கு முன்னால், மகேந்திர சக்கரவர்த்தியின் காலத்தில் இவனைப் பார்த்திருக்கிறேன். இப்போது அடையாளம் தெரியவில்லை" என்றார்.

"விக்கிரமனுடைய சதியாலோசனையைக் கண்டுபிடித்துச் சொன்னது பூபதிதான். ஆனாலும் சக்கரவர்த்திக்கு ஏனோ இவன் பேரில் தயவு பிறக்கவில்லை!" என்றார் அச்சுதவர்மர்.

சிறுத்தொண்டர் இதற்கு ஒன்றும் சொல்லாமல் மறுபடியும் ஒரு தடவை மாரப்பனை ஏற இறங்கப் பார்த்து விட்டு மேலே போகத் தொடங்கினார்.

அவர்கள் இருவரும் அப்பால் சென்றதும், சேடிகள் சூழ்ந்த பல்லக்கு பின்னால் வருவதைப் பார்த்து, சக்கரவர்த்தியின் திருமகளாயிருக்கலாம் என்று மாரப்பன் ஊகித்துக் கொண்டு அவசரமாய் விலகிச் செல்லத் தொடங்கினான். ஆனால் என்ன ஆச்சரியம்! அதே இடத்தில் பல்லக்கு நின்றது. "பூபதி!" என்று மதுரமான பெண் குரலில் அழைப்பது கேட்டது. மாரப்பன் திரும்பிப் பார்த்த போது, பல்லக்கில் பூரண சந்திரனை ஒத்த முக காந்தியுடைய குந்தவி தேவியும், அவளருகே சிவபக்தியே உருவங்கொண்டது போன்ற மூதாட்டி ஒருவரும் இருக்கக் கண்டான். குந்தவி தேவிதான் தன்னை அழைக்கிறாள் என்று அறிந்ததும், மாரப்பனுடைய உள்ளத்தில் வியப்பும் மகிழ்ச்சியும் சேர்ந்தாற் போல் பொங்கின. ஒரு பக்கம் சங்கோசம்

குரு - சிஷ்யாள் இரண்டு பேருமே விஷயங்களை நன்றாகத் தெரிந்து கொள்ள 'பரிப்ரச்நம்' பெரிய தூண்டுகோல். வாத்யார் ஸ்டூடன்டைக் கேட்கிறாற்போலவே இவனும் அவரைக் கேட்கணும். இதிலேதான் புதுக புதுசாக, இன்டரெஸ்டிங்காக விஷயங்கள் வரும். (ஜே.) க்ருஷ்ணமூர்த்தி இப்படித்தான் கேள்வி கேட்டு பதில் சொல்கிற ஸெஷன்ஸ் நடத்துகிறார். ஸ்வாரஸ்யமாயிருக்கிறது என்கிறார்கள். நாங்களும் பாஷ்ய பாடம், வாக்யார்த்தம் என்று நடத்தும் போது, கேட்கிறவர்கள் புத்திசாலித்தனமாகக் கேள்வி கேட்கிற போதுதான் ரஸம் கூடுகிறது. 'அடடா, இது நமக்குத் தெரியலையே! இப்படி நமக்குத் தோணலையே! இதுக்கு பதில் தெரிஞ்சுக்கணும்' என்ற ஆர்வம் பிறக்கிறது.



**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

பிடுங்கித் தின்றது. பல்லக்கின் அருகில் சென்று, குந்தவியைப் பார்க்க விரும்பினானாயினும் கூச்சத்தினால் நிமிர்ந்து பார்க்க முடியாதவனாய்த் தரையைப் பார்த்துக் கொண்டு நின்றான்.

"பூபதி! இன்று என் தந்தை உன்னிடம் ரொம்பக் கடுமையாயிருந்து விட்டார். அதற்காக நீ வருத்தப்பட வேண்டாம். உன் பேச்சில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. எப்படியாவது அந்தப் போலி வேஷதாரிச் சிவனடியாரை மட்டும் நீ கண்டுபிடித்து விடு. அப்புறம் உன்னுடைய கட்சியில் நான் இருப்பேன்!" என்று குந்தவி தேவி அனுதாபம் நிறைந்த குரலில் கூறிய போது, மாரப்பனுக்கு ஏற்பட்ட மனக்கிளர்ச்சியை வர்ணிக்கத் தரமன்று. அதல பாதாளத்திலிருந்து ஒரே அடியாகச் சொர்க்கத்துக்கு வந்து விட்டதாகவே அவனுக்குத் தோன்றியது. சிறிது தலைநிமிர்ந்து, "அம்மணி! தங்களுடைய சித்தம் என்னுடைய பாக்கியம். அந்தப் போலிச் சிவனடியாரைக் கண்டுபிடிக்காமல் இனிமேல் நான் கண்ணுறக்கம் கொள்ள மாட்டேன்" என்றான்.

"சந்தோஷம், கண்டுபிடித்ததும் எனக்கு உடனே தெரியப்படுத்து" என்று சொல்லி விட்டு, குந்தவி தேவி பல்லக்கை மேலே செல்லும்படி கட்டளையிட்டாள்.

**ப**ல்லக்கும் பரிவாரங்களும் போன பிறகு மாரப்பன் சிறிது நேரம் ஸ்தம்பித்து நின்றான். தான் இப்போது கண்டதும் கேட்டதும் கனவல்ல என்று நிச்சயம் செய்து கொண்டபின், பக்கத்தில் வந்து நின்ற புரவியின் மீது மறுபடியும் ஏறிக் கொண்டான். அச்சுதவர்மருடன் சென்ற மொட்டைச் சாமியாரின் நினைவு வந்தது. வாதாபிப் போரில் வென்ற தளபதி பரஞ்சோதியைப் பற்றியும் மாரப்பன் கேள்விப்பட்டதுண்டு. அந்நாளில் அவர் பார்த்திப மகாராஜாவுக்கு மிகவும் வேண்டியவர் என்றும் கேட்டிருந்தான். எனவே, அவர்தான் அவ்வப்போது ஜடாமகுடவேஷம் பூண்ட சிவனடியாராய்த் தோன்றி நடித்து வந்தாரோ, என்னவோ? ஏன் இருக்கக் கூடாது? - இதன் உண்மையை எப்படியாவது கண்டுபிடித்தாக வேண்டும். ஆனால், எப்படி? பொன்னனையும் வள்ளியையும் சிநேகம் செய்து கொண்டு அவர்கள் மூலமாகத்தான் இதை நிறைவேற்ற வேண்டும். உடனே மாரப்ப பூபதிக்கு ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. தான் அன்று தோணித் துறைக்குப் போகும் காவேரிக் கரைச் சாலையில் வெகு தூரம் போய் விட்டுத் திரும்பியிருந்தும், போகும்போதோ, வரும்போதோ பொன்னனையும் வள்ளியையும் சந்திக்கவில்லை. ஆகவே, அவர்கள் இன்றிரவு உறையூரில் தான் இருப்பார்கள். எங்கே தங்கியிருப்பார்கள்? வள்ளியின் பாட்டன் வீட்டில் ஒருவேளை இருக்கலாமல்லவா!....

உடனே மாரப்பன் விரைவாகக் குதிரையை விட்டுக் கொண்டு சென்று தன் மாளிகையை அடைந்தான். வாசலில் நின்ற ஏவலாளர்களிடம் குதிரையைக் கொடுத்து விட்டு, அங்கிருந்து கால்நடையாகக் கிளம்பினான். இரவு சாப்பாட்டைப் பற்றிய நினைவே அவனுக்கில்லை. பசி தாகமெல்லாம் மறந்து போய் விட்டது. பொன்னனையும் வள்ளியையும் இன்றிரவு சந்திக்க வேண்டுமென்னும் ஆவலினால் உறையூர்க் கம்மாளத் தெருவை நோக்கி நடக்கலுற்றான்.

அப்போது அஸ்தமித்து ஒரு ஜாமத்துக்கு மேலிருக்கும். உறையூரின் வீதிகளில் ஜனங்களின் நடமாட்டம் பெரிதும் குறைந்திருந்தது. சந்தடி அநேகமாக அடங்கி விட்டது. ஆலயங்களுக்குப் போய் விட்டுத் திரும்புவோர், தெருக்கூத்துப் பார்க்கச் செல்வோர், இராப் பிச்சைக்காரர் ஆகியவர்கள் அங்

கொருவரும் இங்கொருவருமாய்க் காணப்பட்டனர். எங்கேயோ வெகுதூரத்தில் "அகோ வாரும் பிள்ளாய்! அரிச்சந்திர மகாராஜனே!" என்று விசுவாமித்திர முனிவர் அலறிக் கொண்டிருந்தார்!

மாரப்பன் வீதிகளின் ஓரமாகத் தன்னை யாரும் கவனிக்காதபடி நடந்து விரைந்து போய்க் கொண்டிருந்தான். அவன் கம்மாளத் தெருவை நெருங்கிய போது திடீரென்று பேய் பிசாசைக் கண்டவன் போல் ஒருகணம் திகைத்து நின்று விட்டான். ஏனென்றால் கம்மாளத் தெரு திரும்பும் முனையில் அப்போதுதான் அணைந்து கொண்டிருந்த அகல்விளக்கின் வெளிச்சத்தில் அவன் ஒரு உருவத்தைக் கண்டான். அது, அவனுடைய உள்ளத்தில் நிலைபெற்றிருந்த சிவனடியாரின் உருவந்தான். அந்த உருவத்தை அவன் பார்த்த அதே சமயத்தில் விளக்கு அணைந்து போய் விட்டது. திகைத்து நின்ற மாரப்பபூபதி மறுகணம் அந்த உருவம் நின்ற இடத்தை நோக்கி விரைந்து ஓடினான். ஆகா! அந்தப் பொல்லாத வஞ்சக வேஷதாரியை அன்றிரவு கையும் மெய்யுமாய்ப் பிடித்துக் கொண்டு போய்ச் சக்கரவர்த்தித் திருமகளின் முன்னால் நிறுத்தினால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அந்த ஆவலுடனே அவன் ஓடினான். ஆனால், விளக்குத் தூணின் அருகில் சென்று பார்த்த போது அங்கு ஒருவரையும் காணவில்லை. அந்த இடத்திலிருந்து நான்கு திசையிலும் நாலு வீதிகள் போய்க் கொண்டிருந்தன. அவற்றுள் எந்த வீதி வழியாகச் சிவனடியார் போயிருக்கக் கூடுமென்று தீர்மானிக்க முடியவில்லை.

மாரப்ப பூபதியின் உள்ளத்தில் சட்டென்று ஒரு யோசனை உதித்தது. ஆம்; தான் பார்த்த உருவம் அந்தச் சிவனடியாராயிருக்கும் பட்சத்தில், அவர் பொன்னனையும் வள்ளியையும் பார்ப்பதற்குத்தான் அங்கு வந்திருக்க வேண்டும். வீரபத்திர ஆச்சாரியின் வீட்டுக்குத்தான் போயிருப்பார். இன்னும் என்ன சதியாலோசனைக்காக அவர்கள் அங்கே கூடுகிறார்களோ, என்னவோ தெரியவில்லை. நரசிம்மவர்ம சக்கரவர்த்தி உறையூருக்கு வந்திருக்கும் சமயத்தில் இந்தச் சதியாலோசனை நடக்கிறது! ஆகா! குற்றம் செய்வதில் ஈடுபட்டிருக்கும் போதே மூன்று பேரையும் கையும் மெய்யுமாய்ப் பிடித்து விட முடியுமானால்? சக்கரவர்த்திக்குத் தன் பேரில் அகாரணமாக ஏற்பட்டிருக்கும் சந்தேகத்தை நிவர்த்தி செய்து விடலாமல்லவா? பிறகு....

இப்படி சிந்தித்துக் கொண்டே மாரப்பன் வீரபத்திர ஆச்சாரியின் வீட்டை நெருங்கிய போது, இன்னொரு அதிசயம் அவனுக்கு அங்கே காத்திருந்தது. அந்த வீட்டின் கதவைத் திறந்து கொண்டு இருவர் வெளியில் வந்தார்கள். மாரப்பன் ஒரு வீட்டுத் திண்ணை ஓரத்தில் தூண் மறைவில் நின்றபடி உற்றுக் கவனித்தான். வெளியே வந்தவர்கள் பொன்னனும் வள்ளியுந்தான். வள்ளி இடையில் வைத்திருந்த விளக்கைச் சேலைத் தலைப்பினால் மறைத்து எடுத்துக் கொண்டு வந்ததும் தெரிந்தது. அவர்கள் இருவரும் வீரபத்திர ஆச்சாரி வீட்டுக்குப் பக்கத்திலிருந்த சந்தின் வழியாக வடக்கு நோக்கிச் சென்றார்கள்.

"இதில் ஏதோ மர்மம் இருக்கிறது; இவர்கள் ஏதோ பெரிய சதித்தொழில் இன்று செய்யப் போகிறார்கள். இதில் அந்தச் சிவனடியாரும் சேர்ந்திருக்கிறார். அவர் முன்னால் போயிருக்கும் இடத்துக்கு இவர்கள்



பின்தொடர்ந்து போகிறார்கள்" என்று மாரப்பன் தீர்மானித்துக் கொண்டான். சொல்ல முடியாத பரபரப்பும் உற்சாகமும் அவனை ஒரு புது மனிதனாகச் செய்து விட்டன. பொன்னனும் வள்ளியும் போன வழியே, அவர்கள் கண்ணுக்கு மறையாத தூரத்தில் மாரப்பன் சிறிதும் ஓசை கேட்காதபடி நடந்து போனான்.

அந்தச் சந்து வழியே பொன்னனும் வள்ளியும் சென்று காவேரிக் கரையை அடைந்தார்கள். அங்கே ஒரு மரத்தின் வேரில் கட்டிப் போட்டிருந்த படகில் வள்ளி ஏறி உட்கார்ந்து கொண்டாள். கூடையைப் படகின் அடியில் வைத்துப் பத்திரமாய் மூடிக் கொண்டாள். சென்ற அத்தியாயத்தில் நாம் பார்த்தபடியே பொன்னன் படகை இழுத்துக் கொண்டு போய் அரண்மனைத் தோட்டத்தின் மதிலை அடைந்ததும் படகை அங்கேயே கட்டிப் போட்டு விட்டு, வள்ளியையும் அழைத்துக் கொண்டு தோட்டத்துக்குள்ளே பிரவேசித்தான்.

அந்தத் தோட்டம், பார்த்திப மகாராஜா வாழ்ந்த பழைய சோழவம்சத்து அரண்மனைத் தோட்டம் என்பதை மாரப்பன் அறிந்திருந்தான். அந்த அரண்மனையில் அச்சமயம் யாருமில்லை. அது சக்கரவர்த்தியின் கட்டளையினால் பூட்டிக் கிடந்தது - என்பதும் அவனுக்குத் தெரிந்ததுதான். ஆகவே, பொன்னனும் வள்ளியும் அந்த அரண்மனைக்குள் கொல்லைப்புரத்தின் வழியாக நுழைவது ஏதோ கெட்ட காரியத்திற்காகத்தான் என்றும், அநேகமாக அந்த அரண்மனைக்குள் அச்சமயம் சிவனடியார் இருக்கலாமென்றும் மாரப்பபூபதி ஊகித்தான். இன்னும் ஒரு பயங்கரமான - விபரீதமான சந்தேகம் அச்சமயம் அவனுடைய உள்ளத்தில் உதித்தது. பார்த்திப மகாராஜா போர்க்களத்தில் இறந்த செய்தியே ஒரு சமயம் பொய்யாயிருக்குமோ? அவர் போர்க்களத்திலிருந்து தப்பி ஓடி, பிறகு இப்படிச் சிவனடியாரின் வேஷத்தில் வந்து விபரீதமான காரியங்களையெல்லாம் செய்து வருகிறாரோ? - என்று நினைத்தான். எப்படியிருந்தாலும் இன்று இரவு எல்லா மர்மங்களும் வெளியாகி விடப் போகின்றன! இந்த நம்பிக்கையுடன் அவன் மதிற்கதவின் வெளிப்புற நாதாங்கியைப் போட்டு விட்டு, பொன்னன் திரும்பி வருவதற்குள் தன்னுடைய ஆட்களை உதவிக்கு அழைத்துக் கொண்டு அங்கே வந்து விடுவது என்ற தீர்மானத்துடன் விரைந்து சென்றான்.

## 25. சமய சஞ்சீவி

தன்னைப் பின் தொடர்ந்து இரண்டு பேர் வந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அறியாத பொன்னன், அரண்மனை தோட்டத்திற்குள் உற்சாகத்துடன் போய்க் கொண்டிருந்தான். இடையிடையே அவன், "வள்ளி! அதோ அந்த மாமரத்தடியில் தான் மகாராஜாவும் மகாராணியும் சாயங்கால வேளையிலே உட்காருவது வழக்கம். அதோ பார்த்தாயா? அந்த மூலையில் ஒரு தாமரைக்குளம் இருக்கிறது. அதில்தான் முதன் முதலில் இளவரசர் நீந்தக் கற்றுக் கொண்டார்!" என்று இவ்விதம் சொல்லிக் கொண்டே போனான். வள்ளி ஒவ்வொரு தடவையும், "கொஞ்சம் மெதுவாகப் பேசு!" என்று எச்சரித்துக் கொண்டு வந்தாள்.

இவர்களுடைய பேச்சுக் குரலைக் கேட்டு மரங்களின் மீது உறங்கிக் கொண்டிருந்த பட்சிகள்



சில விழித்துச் சிறகுகளை அடித்துக் கொண்டன. அப்போது பொன்னன் கையைத் தட்டி ஓசைப்படுத்தியதுடன் "உஷ்!" என்று சப்தமிட்டான்.

"ஆமாம்; உன்னுடைய தைரியமெல்லாம் பாதிராத்திரியில் தூங்குகிற பட்சிகளிடந்தான். எதிரியின் கையில் கத்தியைக் கண்டால் உடனே விழுந்தடித்து ஓடி வந்து விடுவாய்!" என்று வள்ளி சொன்ன பிறகு பொன்னன் சற்று வாயை மூடினான்.

அரண்மனையின் பின்புறத்தை அவர்கள் அடைந்ததும் பொன்னன், "வள்ளி! உள்ளே போய் எல்லாம் பார்க்கலாமா அல்லது வந்த காரியத்தைப் பார்த்துக் கொண்டு திரும்புவோமா?" என்று கேட்டான்.

விளக்கில் எண்ணெய் கூட ஆகி விட்டது. சீக்கிரம் வந்த காரியத்தைப் பார்க்கலாம்! கோயில் எந்தப் பக்கம் இருக்கிறது?"

மாவீரன் பேரைச் சொன்னால்...

கிராமச் சுவை!

வேதாரண்யம் தாலுகாவில் உள்ள எங்கள் கருப்பம்புலம் கிராமத்தார் யாரும் இதுவரை காவல் நிலையத்தில் அடியெடுத்து வைத்ததில்லை. காரணம், எங்கள் கிராமத்திலுள்ள மாவீரன்! நாற்பத்திரண்டு வயதான இவர் ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும் இவர் வழங்கும் பஞ்சாயத்துத் தீர்ப்பு மாற்றுக் கட்சியினர் கூட குறைசொல்ல முடியாதபடி இருக்கும். இவர் பெயரைச் சொன்னாலே சுபகாரியங்கள் தடையின்றி நடக்கும். எனவேதான் பி.வி. குழந்தைவேலு என்கிற இவரைப் பெயர் சொல்லி அழைக்காமல், 'மாவீரன்' என்கிற அடைமொழியில் அழைக்கிறோம்.

கருப்பம்புலம், வசந்தா சித்திரவேலு.

என்று வள்ளி கேட்டாள்.

"அப்படியானால் இங்கே வா!" என்று பொன்னன் கிழக்குப் பக்கமாக அவளை அழைத்துச் சென்றான்.

பார்த்திப மகாராஜாவின் காலத்தில் ஒருமுறை நாம் அரண்மனைக் கோயிலைப் பார்த்திருக்கிறோம். அந்த அழகிய சிறு கோயிலானது அரண்மனையைச் சேர்ந்தாற் போல கீழ்ப் பாகத்தில் அமைந்திருந்தது. அதற்குள் பிரவேசிப்பதற்கு மூன்று வழிகள் இருந்தன. அரண்மனைக்குள்ளேயிருந்து நேராகக் கோயிலுக்குள் வரலாம். இதுதான் பிரதான வாசல். பின்புறத்துத் தோட்டத்திலிருந்து பிரவேசிப்பதற்கு ஒரு வாசல் இருந்தது. அபிஷேகத்திற்குக் காவேரி நீரும், அலங்காரத்திற்குப் புஷ்பமும் கொண்டு வருவதற்காக இந்த வாசல் ஏற்பட்டது. இவற்றைத் தவிர அர்ச்சகர் வெளியில் இருந்து நேரே வருவதற்காகக் கிழக்கு மதிலில் சிறு வாசல் இருந்தது. இவற்றுள் தோட்டத்திலிருந்து பிரவேசிப்பதற்குரிய வாசலைப் பொன்னன் அடைந்து, கதவின் பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான். அவனுடன் வள்ளியும் போனாள். மங்கிய அகல் விளக்கின் வெளிச்சத்தில் அங்கிருந்த விக்கிரகங்களின் காட்சியைக் கண்டு இருவரும் சிறிது நேரம் பிரமித்து நின்றார்கள். நெடுங்காலமாகப் பூசை முதலியவை ஒன்றுமில்லாமலிருந்தும், அந்த தெய்வீகச் சிலைகளின் ஜீவகளை சிறிதும் குறையவில்லை.

முதலில் திகைப்பு நீங்கியவனான பொன்னன், "வள்ளி! நிற்க நேரமில்லை" என்று சொல்லி, மகாவிஷ்ணு விக்கிரகத்தின் சமீபம் சென்று, விஷ்ணு பாதத்தின் அடியிலிருந்த அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய நீள வாட்டமான மரப் பெட்டியை எடுத்துக் கொண்டான்.

"சோழ குலத்தின் விலையில்லாப் பொக்கிஷம் இந்தப் பெட்டிக்குள் இருக்கிறது, வள்ளி! நல்லவேளை, இது அந்த நரசிம்ம சக்கரவர்த்தியின் கண்ணில் படவில்லை. பட்டிருந்தால், இதற்குள் காஞ்சிக்குக் கட்டாயம் போயிருக்கும்!" என்று சொல்லிக் கொண்டே கோயிலிலிருந்து வெளியேறினான்.

அவனைப் பின்தொடர்ந்து வெளியே வந்த வள்ளி, "ஐயையோ! விளக்கு அணைந்து விட்டதே!" என்றாள். "நல்ல வேளை! காரியம் ஆனபிறகு அணைந்தது! போனால் போகட்டும். இப்போது எப்படிப் போகலாம். தோட்டத்தின் வழியாக இருட்டில் போவது கஷ்டம். கிழக்கு மதில் வாசல் வழியாக வேணுமானால் போய் விடலாமா? வா! கதவு திறக்கிறதா, பார்ப்போம்" என்று சொல்லிப் பொன்னன் தோட்டத்தின் கிழக்கு மதிலை நோக்கி விரைந்து சென்றான். அங்கிருந்த வாசற்படியருகில் இருவரும் போனதும், மதிலுக்கு வெளியில் பேச்சுக் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டார்கள். பின்வரும் சம்பாஷணை அவர்கள் காதில் லேசாக விழுந்தது.

"மாரப்ப பூபதியின் பேச்சை நம்பியா இங்கே கத்தியை உருவிக் கொண்டு நிற்கிறாய்? அரண்மனையிலாவது, திருடன் நுழையவாவது!"

"திருடன் நுழைகிறதைக் கண்ணாலே பார்த்தேன் என்று மாரப்பபூபதி சொல்லும்போது எப்படி அதை நம்பாமலிருப்பது?"

"தப்பிப் போவதற்கு இதுதான் வழியா? வேறு வழியில்லையா?"

"திருடன் அரண்மனை வாசல் வழியாகத் துணிந்து கிளம்ப மாட்டான். இந்த வாசலுக்கு வராவிட்டால், தோட்டத்தின் வழி

யாகக் காவேரியில் போய் இறங்க வேண்டியதுதான். அதற்குள்ளாக... அதோ பார்."

"என்ன அங்கே? ஏக தீவர்த்தி வெளிச்சமாகத் தெரிகிறதே!"

"மாரப்ப பூபதி ஆட்களைத் திரட்டிக் கொண்டு வருகிறார்."

இந்தப் பேச்சைக் கேட்டதும் பொன்னனுக்கு உடம்பு வெலவெலத்துப் போய் விட்டது. ஒரு கண நேரத்தில் அவனுடைய உள்ளம் என்னவெல்லாமோ கற்பனை செய்து விட்டது. தன்னைப் பெட்டியுடன் மாரப்ப பூபதி கைப்பிடியாகப் பிடித்து சக்கரவர்த்தியின் முன்னால் கொண்டு வந்து நிறுத்துவது போலவும், சக்கரவர்த்தி தன்னைப் பார்த்து, "வெகு யோக்கியன் போல் நடித்தாயே? திருடனா நீ?" என்று கேட்பது போலவும் அவனுடைய மனக்கண்முன் தோன்றியது. உடனே, வள்ளியையும் ஒரு கையினால் பற்றி இழுத்துக் கொண்டு தோட்டத்தில் புகுந்து வடதிசையை நோக்கி ஓடினான். மரங்களில் முட்டிக் கொண்டும் செடி, கொடிகளின் மேல் விழுந்தும் அவர்கள் விரைந்து சென்று கடைசியில் தோட்டத்தின் கொல்லைப்புற மதிற்சுவரை அடைந்தார்கள். கதவருகில் சிறிது நின்று ஏதாவது வெளியில் சப்தம் கேட்கிறதா என்று உற்றுக் கேட்டார்கள். சப்தம் ஒன்றும் இல்லை. மெதுவாகக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்கள். அவசரமாகக் காவேரியில் இறங்கிப் பார்க்கும் போது, அங்கே அவர்கள் கட்டி விட்டுப் போயிருந்த படகைக் காணோம்!

பொன்னனுக்கும் வள்ளிக்கும் ஒருகணம் மூச்சே நின்று விட்டது! தூரத்தில் தீவர்த்திகளின் வெளிச்சம் தெரிந்தது. ஆட்கள் ஓடி வரும் ஆரவாரமும் கேட்டது. இன்னது செய்வதென்று தெரியாமல் சிறிது திகைத்து நின்ற பிறகு, "வள்ளி, படகு ஒருவேளை ஆற்றோடு மிதந்து போய்க் கிழக்கே எங்கேயாவது தங்கியிருக்கும். வா, பார்க்கலாம்" என்றான். இருவரும் நதிக்கரையோடு கிழக்கு நோக்கி ஓடினார்கள். அரண்மனை மதிலுக்குப் பக்கத்தில் தெற்கே இருந்து வந்த சாலை வழியாகத் தீவர்த்திகளுடன் ஒரு கும்பல் வருவது தெரிந்தது. "அதோ ஓடுகிறார்கள்!" என்ற சப்தமும் கேட்டது.

பொன்னனும் வள்ளியும் இன்னும் விரைவாக ஓடினார்கள். கொஞ்ச தூரம் போனதும் ஒரு மரத்தின் வேரில் தங்களுடைய படகு இழுத்துக் கட்டப்பட்டிருப்பதைப் பார்த்து அவர்களுக்குப் பரம ஆச்சரியமாய்ப் போய் விட்டது. ஆனால் ஆச்சரியப்பட்டுக் கொண்டு நிற்பதற்கு அதுவா தருணம்? அதற்குள், தீவர்த்திகளுடன் வந்த கும்பலும் காவேரிக் கரையை நெருங்கி விட்டது. "ஐயோ! அவர்களிடம் பெட்டியுடன் சிக்கிக் கொள்ளப் போகிறோமே!" என்று பொன்னன் பதைபதைத்தான். அதே சமயத்தில் படகு கட்டியிருந்த மரத்துக்குப் பின்னாலிருந்து ஒரு உருவம் வெளிவந்தது! அது சிவனடியாருடைய உருவம் என்பதை அறிந்ததும் வள்ளி, "சுவாமி! நீங்களா!" என்று ஆச்சரியமும், மகிழ்ச்சியும் பொங்கக் கூச்சலிட்டாள்.

"உஷ்" என்று அடக்கினார் சிவனடியார். "பொன்னா! இது பேசிக் கொண்டிருக்கும் சமயமில்லை. பெட்டியை இப்படிக் கொடு! நான் காப்பாற்றி உன்னிடம் ஒப்புவிக்கிறேன். இல்லாவிட்டால், அகப்பட்டுக் கொள்வாய்!" என்றார்.

"கொடு! கொடு!" என்று வள்ளி பொன்னனைத் தூண்டினாள்.

பொன்னன் சிவனடியாரிடம் பெட்டியைத் தயக்கத்துடன் தூக்கிக் கொடுத்தான்.

சிவனடியார், "வள்ளி! நீ ஒரு சமயம் மாரப்பனிடமிருந்து என்னைத் தப்புவித்தாய். அதற்குப் பிரதியாக இன்று உங்களை அதே மாரப்பனிடமிருந்து தப்புவிக்கிறேன்!" என்றார்.

அடுத்த நிமிஷம் அங்கே சிவனடியாரைக் காணோம். மர நிழலில் மறைந்து மாயமாய்ப் போய் விட்டார்.

பொன்னன் படகை அவசரமாக அவிழ்த்து விட்டு, வள்ளியை அதில் ஏற்றித் தானும் ஏறிக் கொண்டான்.

அதே சமயத்தில் மாரப்பனும் அவனுடைய ஆட்களும் காவேரிக் கரையை அடைந்து படகு இருந்த இடத்தை நோக்கி விரைந்து ஓடி வரத் தொடங்கினார்கள்.

(தொடரும்)



"மழுப்பலா பதில் சொல்றதுல நம்ம தலைவருக்கு ஈடு இணையே இல்லை."

"எப்படி.....?"

"ராவுக்குப்



பிறகு...?ன்னு ஒரு நிருபர் கேட்டதுக்கு, 'பகல்'னு பதில் சொல்லியிருக்காரே!"

— சீர்காழி. வி. ரேவதி



# காசி பில்டர்ஸ் வழங்கும் பரிசு மழை

**We accept Fixed Deposits at the rate of 24% with 3% incentives.**

## ஒரு சதுரடிக்கு 5% முதல் 10% வரை சிறப்பு தள்ளுபடி

"காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்" திட்டத்தில் 01-01-95 முதல் 10-02-95 வரை ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 277 சதுர அடிகள் முதல் 1111 சதுரடிகள் வரையிலுள்ள வீட்டினைப் பதிவு செய்யும் உறுப்பினர்களுக்கு ரூ. 600/- முதல் ரூ. 2,500/- வரையிலான சிறப்புப் பரிசுப் பொருட்கள் வழங்கப்படும். மற்றும் "சுபமங்களா" திட்டத்தில் ரூ. 10,000- மட்டுமே செலுத்தி சொந்த வீடு பெறலாம். மீதமுள்ள தொகைக்கு நாங்களே கடனுதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத் திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்களுக்கு ரூ. 1000/- மதிப்புள்ள கவர்ச்சிகரமான பரிசுப் பொருட்கள் வழங்கப்படும். இது தவிர மேலும் எங்களது காசி திரையரங்கில் திரையிடப்படும் "எங்கிருந்தோ வந்தான்" திரைப்படத்திற்கு மேற்கண்ட தேதிகளில் வீடு பதிவு செய்பவர்களுக்கு இலவச அனுமதி சீட்டு வழங்குவதுடன் திருப்பதி திருத்தணி நெடுஞ்சாலையில் அமைந்துள்ள எங்களது ஹோட்டல் காசி இன்டர்நேஷனலில் அனைத்து வசதிகளுடன் ஒருநாள் தங்குவதற்கும் அனுமதி அளிக்கிறோம்.

### வீடு கிடைக்கும் இடங்கள் :

கே. கே. நகர் (மேற்கு), விருகம்பாக்கம், போரூர், வளசரவாக்கம், சாலிகிராமம், கில்நகர், வடபழநி ஆகிய இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

### வைப்பு நிதி :

இத் திட்டத்தில் முதலீடு செய்பவர்களுக்கு 24% கூட்டு வட்டியுடன் 3% ஊக்கத் தொகையும் வழங்கப்படும்.

மேலும் விவரங்களுக்கு :

**காசி ஹவுசிங் & டெவலப்மென்ட் லிமிடெட்**

*மற்றும்*

**காசி பில்டர்ஸ்**

காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.
போன் : 4821969, 4822206, 4825606, 4825506 FAX : 044-4821897
ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.

**குறிப்பு: 11-02-95 முதல் ஒரு சதுரடியின் விலை ரூ. 450/-லிருந்து 500/- ஆக உயர்த்தப்படும்.**

**T.V. '95**

# முடிந்தவரை உண்மையைச் சொல்லும் தொடர்....

நீங்கள் சன் டி.வி.யில் பார்த்துக் கொண்டிருக்கும் எம்.ஜி.ஆர். வாழ்க்கை வரலாற்றுத் தொடரில் எம்.ஜி.ஆராக நடிப்பவர் யாரென்று தெரியுமா? "இவர்தான் என்று யாரையும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது!" என்கிறார், அந்தத் தொடரை இயக்கிக் கொண்டிருக்கும் ஸ்ரீகவி.

காரணம்? "ஒருவருக்கு முகம் ஓரளவுக்கு ஒத்து வந்தால் உயரம் வருவதில்லை. உயரம் ஒத்து வருபவர்களுக்கு நடை ஒத்துவரவில்லை. எனவே, குளோசப்புக்கு ஒருவர், லாங்ஷாட்டுக்கு ஒருவர், பக்கவாட்டுத் தோற்றத்திற்கு ஒருவர், பின்புறத் தோற்றத்திற்கு ஒருவர், நடைக்காக ஒருவர் என்று மொத்தம் ஐந்து பேர் நடிக்கிறார்கள்!" என்கிறார், ஸ்ரீகவி.



• நிஜமான உதவியாளர் மாணிக்கம், நிஜமான தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் ஆகியோருடன் நகல் எம்.ஜி.ஆர்....

மணியனின் தயாரிப்பில் மொத்தம் இருபத்தாறு வாரங்களுக்கு ஒளிபரப்பாகப் போகும் இந்தத் தொடர், எம்.ஜி.ஆரின் வாழ்க்கையை முழுமையாகப் பிரதிபலிக்குமா?

"முழுமையாகச் சொல்வதற்கு எப்படி 26 வாரங்கள் போதும்? அதனால், அவர் சிறு வயதில் கஷ்டப்பட்டு எப்படி முன்னேறினார் என்பதைக் காட்டுகிற, அவரது மனிதாபிமானத்தின் உயர்வைக் காட்டுகிற ஒரு தொடர்தான் இது!" என்கிறார், ஸ்ரீகவி.

அப்படியானால் அரசியல் இருக்காதா? "நிச்சயமாக அரசியல் உண்டு. அவரது அரசியலைக் காட்டாமல் எப்படி அவர் முதல்வராகச் செயல்பட்டதைக் காட்ட முடியும்? ஆனால், சர்ச்சையைக் கிளப்புகிற மாதிரியான சம்பவங்களைத்தான் நாங்கள் தொடவில்லை. காரணம், 'நான் ஏன் பிறந்தேன்?' தொடரை எழுதும் போது, 'மற்றவர்கள் மனம் புண்படாதபடி, முடிந்தவரை உண்மையைச் சொல்வதே இந்தத் தொடரின் நோக்கம்' என்று எம்.ஜி.ஆரே குறிப்பிட்டிருக்கிறார். அதை அடிப்படையாக வைத்துத் தான் இந்தத் தொடரை இயக்கச் சொல்லியிருக்கிறார் மணியன்."

இந்தத் தொடரில் சில நிஜமான பாத்திரங்களும் உண்டு. உதாரணத்திற்கு மாணிக்கம். எம்.ஜி.ஆரிடம் உதவியாளராக இருந்த இவர், இந்தத் தொடரிலும் உதவியாளராக நடிக்கிறார். முதல்வர் எம்.ஜி.ஆரிடம் தலைமைச் செயலாளராகப் பணியாற்றிய கார்த்திகேயன் இதிலும் தலைமைச் செயலாளராக நடிக்கிறார்.

இந்தத் தொடரில் நடிக்கும் எம்.ஜி.ஆர். அணிந்திருக்கும் தொப்பி, மற்றும் சில உடைகள் நிஜமாகவே எம்.ஜி.ஆர். உபயோகப்படுத்தியவைதான். தோட்டத்தில் எம்.ஜி.ஆர். பயன்படுத்திய அறையிலும் படப்பிடிப்பை நடத்தியிருக்கிறார்கள்.

எல்லாம் சரி. கருணாநிதி வருகிறாரா? "வருகிறார். ஆனால், நிஜக் கருணாநிதி அல்ல. அவர் பாத்திரத்தில் வேறொருவர்தான் நடிக்கிறார். காரணம், எம்.ஜி.ஆர்: - கலைஞர் சந்திப்புகளைக் காட்டுகிற போது, அந்தச் சந்திப்புகளுக்கான காலகட்டத்தில் கலைஞர் மிகவும் இளமைத் தோற்றத்துடன் இருந்ததால், வேறொருவர் நடிப்பதைத் தவிர வேறு வழி யில்லை!" என்கிறார் ஸ்ரீகவி.

எது எப்படியாயினும் அ.தி.மு.க. கரை வேஷ்டியோடு எம்.ஜி.ஆர்., வரும் போது, தன்னையறியாமலே சன் டி.வி. ஜெயலலிதாவுக்கல்லவா நல்லது செய்வது 'போல்' இருக்கிறது!

— ப்ரின்ஸ்









# “கதைதான் என் படத்தின் ஹீரோ!”

## – டைரக்டர் வி. சேகர்

**பி.யூ.சி.** படிப்பதற்காக அந்த மாணவன் தன் கிராமத்திலிருந்து திருவண்ணாமலைக்கு வந்தான். பெற்றோரின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்ட சந்தோஷம்! ரூம் எடுத்து, மெஸ்ஸில் சாப்பிட்டு, கல்லூரிக்குக் கட் அடித்து, இஷ்டப்படி சினிமா பார்த்து... தனக்கு ஒரு சுதந்திரப் பறவையின் வாழ்க்கை கிடைத்திருப்பதாய் நினைத்து மகிழ்ந்தான். கல்லூரி சகாக்களின் சகவாசத்தால், அவன் ஒரு நடிகருடைய ரசிகர் மன்றத்திலும் உறுப்பினனானான். கல்லூரிப் படிப்பு, அதற்குரிய முக்கியத்துவத்தை இழந்தது.

ஒரு வருடம் போனதே தெரியவில்லை. பையனை இஞ்ஜினியராக்கிப் பார்க்க விரும்பிய தந்தைக்கு, பரீட்சை ரிசல்ட் வந்தபோது அதிர்ச்சி. பையன் பி.யூ.சியில் ‘கோட்’ அடித்திருந்தான். அப்பாவை விட மகனுக்கு அதிக ஷாக். காரணம், உள்ளூரில் ஆரம்பப் பள்ளியிலும் சரி, அப்புறம் பக்கத்து ஊரான வேட்டவலம் உயர்நிலைப் பள்ளியிலும் சரி, முதல் மாணவன் அவன்தான். தன் தோல்விக்கான காரணத்தை மாணவன் அசைபோட்டான். சினிமா... ரசிகர் மன்றம்... இவைதான் காரணம் என்று உணர்ந்தான்.

‘நீங்களும் ஹீரோதான்’ என்ற தமிழ்ப் படத்தின் கதையும் இதேதான். தீவிர சினிமா வெறி எந்த அளவுக்கு இன்றைய தலைமுறையினரைப் பாதித்துள்ளது என்று எடுத்துக்காட்டும் கதை.

சினிமாவில் நுழைந்து, முதல் முறையாய் டைரக்ட் செய்ய வாய்ப்புக் கிடைத்தபோது, சேகர் தமது சொந்த அனுபவத்தைக் கதையாக்கி எடுத்த படம்தான் அது.

**இ**ஞ்ஜினியரிங் வண்ணக்கனவு, காகிதப் பூவாகிவிட, மாநகராட்சி ஹெல்த் டிபார்ட்மெண்ட்டில் மலேரியா ஒழிப்பு ஊழியராய்ச் சேர்ந்தார் சேகர். கூடவே, தம் படிப்பையும் தொடரத் தவறவில்லை. பி.யூ.சியை வெற்றிகரமாய் முடித்தபின், நந்தனம் ஆர்ட்ஸில் பி.ஏ.; பச்சையப்பாவில் எம்.ஏ!

எடிட்டர் லெனினின் அறிமுகம் கிடைத்தபோது, அவர்



• இயக்குகிறார் சேகர்

சினிமாத்துறைக்கு வரும்படி அழைக்க, சினிமா என்பது எவ்வளவு வியாபாரத்தனம் மிகுந்து காணப்படுகிறது என்று சேகர் விமர்சிக்க, சினிமாவின் தரம் என்பது அதனைக் கையாளும் மனிதர்களைப் பொறுத்தது என்று கூறி, பல்வேறு சினிமாப் புள்ளிகளையும் லெனின் உதாரணம் காட்டினார். அதன் விளைவாகத் தமது விமர்சனத்தை மாற்றிக் கொண்ட சேகர், மாநகராட்சிப் பணியையும் விடாமல், லெனினிடம் பகுதிநேர உதவியாளராய்ச் சேர்ந்தார்.

பிறகு, பாக்யராஜ் அறிமுகம். 'சின்னவீடு' படத்தைப் பார்த்துவிட்டு, பாக்யராஜிடமே தைரியமாகப் படத்தை விமர்சிக்க, உடனே அவருக்கு சேகரைப் பிடித்துப் போய்விட்டது. 'உன்னைப் போல ஆளுதான் எனக்குத் தேவை' என்று உடனடியாய்த் தம் உதவியாளராக்கிக் கொண்டுவிட்டார் பாக்யராஜ்.

"எத்தனை சாதாரணமான மனிதராய் இருந்தாலும், சற்றும் உதாசீனப்படுத்தாமல், அவர் சொல்வது முழுவதையும் பொறுமையுடன் கேட்கிற பாக்யராஜின் குணம் என்னை மிகவும் கவர்ந்தது. அவருடன் 'எங்க சின்ன ராசா', 'இது நம்ம ஆளு' என்ற இரு படங்களுக்கும் நான் பணிபுரிந்தேன். அடுத்து எனக்கு டைரக்ஷன் வாய்ப்பு கிடைத்துவிட்டது!" என்கிறார் சேகர்.

"நான் ஒரு மிடில் கிளாஸ் ஆசாமி என்பதால், மத்தியதர வர்க்கத்தினரின் பிரச்னைகளை என்னால் எளிதாய்க் கையாள முடிகிறது. என் சொந்த அனுபவங்கள்தான் எனக்கு எப்போதும் கைகொடுக்கின்றன. எனது 'நான் புடிச்ச மாப்ளே' தெலுங்கில் எடுத்த போதும் வெற்றி பெற்றது. இதன் கதை என் மாமனாருக்கும் எனக்குமிடையே நிலவும் நட்பை அடிப்படையாகக் கொண்டதுதான். 'பொண்டாட்டி சொன்னா கேட்டுக்கணும்' என்ற படத்தில் என் பக்கத்து வீட்டில் நடந்த நிகழ்ச்சியைத்தான் சொல்லியிருக்கிறேன்..." என்று அடுக்குகிறார் சேகர்.

தமது வகுப்பில் படித்த ஓர் அரிஜன மாணவர் தமக்கு நெருங்கிய நண்பராயிருந்ததைக் குறிப்பிடுகிறார்.

"இந்த நண்பனை என் குடும்பம் ஏற்க மறுத்தது. வீட்டுக்குள்ளே நுழையக் கூட அனுமதிக்கவில்லை. இந்த பேத உணர்வு என் மனத்தில் தட்டிவிட்ட பொறிதான் 'ஒன்னா இருக்க கத்துக்கணும்' படத்தின் கரு. அதேபோல் சமயம் கிடைக்கிற போதெல்லாம் தன் பிறந்தவீட்டுப் பெருமை பேசும் என் மனைவிதான், எனது 'பொறந்த வீடா, புகுந்த வீடா?' படத்தின் கதைக்கு இன்ஸ்பிரேஷன்!"



• 'நான் பெத்த மகனே!'

சமீபத்திய வெற்றிப் படமான 'நான் பெத்த மகனே' — தாய் - மகனுக்கிடையே உள்ள உறவையும் மனைவி என்றொரு புதுநபர் இடையே நுழைவதால் அவ்வுறவில் நிகழும் விரிசல் மாறுபாடுகளையும் படம் பிடிக்கிறது. தமிழகத் தாய்மார்களின் ஏகோபித்த வோட்டுக்களைச் சுருட்டி பாக்கெட்டில் போட்டுக் கொண்டிருக்கும் இப்படத்தின் இயக்குனர் வி. சேகருடைய ஃப்ளாஷ்பேக்....

"குடும்பத்தின் சராசரி நிகழ்வுகளைச் சொல்வதனால்தான் உங்கள் படங்கள் எல்லாமே வெற்றிப் படங்களாகப் பெயர் பெற்றனவா?" என்று கேட்டோம் சேகரிடம்.

"ஆமாம். அதுமட்டுமின்றி, அக்கதைகள்தான் என் படங்களில் ஹீரோ! நகைச்சுவையும் யதார்த்தமும் கலந்து தரும்போது வெற்றி கிடைக்கிறது..." என்றார்.

"உங்கள் பட டைட்டில்கள் எல்லாம் பேச்சுத் தமிழிலேயே இருப்பது ஏன்?"

"படத்தின் கதை என்ன என்பது, டைட்டிலிலேயே புரிந்துவிட வேண்டும். எளிமையாய் இருக்கணும். இதுதான் என் டைட்டில் பாலிஸி."

"உங்கள் அடுத்த படம்?"

"கிராமிய, குடும்ப சப்ஜெக்ட்."

"தலைப்பு?"

"பொங்கலோ பொங்கல்!"

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி



# மணிக்கொடி



48

ஜெய்சங்கர் சுக்லாவும் ரத்னாகரும் கல்கத்தா விக்டோரியா மெமோரியலைச் சுற்றி அமைந்திருந்த பெரிய தோட்டத்தின் ஆள் நடமாட்டம் இல்லாத ஒதுக்குப் புறத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

அன்று ஞாயிற்றுக் கிழமை. திங்களைத் தவிர மற்ற எல்லாக் கிழமைகளிலும் விக்டோரியா மெமோரியல் பார்வையாளருக்காகத் திறந்து வைக்கப்பட்டிருக்கும். வெள்ளிக்கிழமைப் பார்வையாளர்களுக்கு மட்டும் எட்டணாக் கட்டணம் உண்டு. மற்ற நாட்களில் இலவசம். 1921 ஆம் ஆண்டில் ஏழு லட்சத்து அறுபதாயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்டது விக்டோரியா மெமோரியல். வெள்ளையரின் பாரம்பரியப் பெருமைகளைப் பறைசாற்றுவதற்கென்றே கட்டப்பட்டதென்பது அதனுள் நுழையும் போதே எவர்க்கும் விளங்கிவிடும். பரந்து விரிந்த தோட்டத்தின் நுழைவாயில், மன்னர் ஏழாம் எட்வர்டின் பெயரால் ஓர் அழகான வளைவுடன் அமைந்திருந்தது. அங்கேயே அரசி விக்டோரியாவின் வெண்கலச் சிலை. கர்சான் பிரபுவின் சிலையும் கூட. அதனுள் காட்சிப் பொருள்களாக வைக்கப்பட்டிருந்த ஏராளமான சமாசாரங்கள் விக்டோரியா காலத்துச் சரித்திரச் சான்றுகள். அவரது பெருமைகளைப் பறை சாற்றுபவை. எண்ணிறந்த வண்ணச் சித்திரங்களைத் தன்னுள் அடக்கிய, நெடியமாடங்களையுடைய முதல் தளம் கண்கொள்ளாக் காட்சியாகும். ஆனாலும், ஜெய்சங்கர் சுக்லாவுக்கும் ரத்னாகருக்கும் இவற்றில் ஈடுபாடு இல்லை என்பதோடு இவற்றை இருவரும் ரசித்ததே கிடையாது. இன்னும் சொல்லப் போனால் விக்டோரியா மெமோரியலைப் பார்க்குந்தோறும் இருவருக்கும் பற்றி எரியும்.

"ரத்னாகர், இந்த மாபெரும் நினைவுச் சின்னத்தைத் தரைமட்டமாக்கும் நாள் என்று வரும்? வருமா, அல்லது வராமலே இருந்து விடுமா?" என்றான் ஜெய்சங்கர் சுக்லா.

"உன் கேள்வியே சரி இல்லை, சுக்லா. இந்த நினைவுச்சின்னங்களை நாம் ஒரு போதும் அழிக்கவே கூடாது. நமது பழைய சரித்திரத்தை நமக்கு எப்போதும் ஞாபகப்படுத்த வேண்டிய சின்னங்கள் இவை. மறுபடியும் இந்த நாடு அன்னியர் வசப்பட்டு அழியக் கூடாது என்று சதா ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கும்."

"ஒரு வகையில் நீ சொல்வதும் நியாயம் தான். இந்த மாளிகையைப் பார்த்ததும் ஏற்பட்ட ஆத்திரத்தில் உன்னிடம் சொல்ல வந்த முக்கியமான விஷயத்தை மறந்து போனேன். ரத்னாகர், நம் 'தோஸ்த்' மாணிக்லால் திங்ரா - நம்மை லண்டன் போலீசாரிடம் காட்டிக் கொடுக்க முயன்று என்னிடம் அடி வாங்கினானே அவன் - கல்கத்தா போலீஸ் இலாகாவில் அதிகாரியாக இருக்கிறானாம். நாம் மாறு வேடங்களில் சுற்றுவதால் அவன் இன்னும் நம்மைக் கண்டுபிடிக்கவில்லை என்று தோன்றுகிறது. அவனும் போலீஸ் உடுப்பென்ன, தலைமுடி வெட்டல் என்ன, தொப்பி என்ன, திருகு மீசை என்ன என்று மாறி இருப்பதால் கண்ணில் பட்டும் நாம் புரிந்து கொள்ளவில்லையோ என்று நினைக்கிறேன்."

"ஆச்சரியமான விஷயந்தான்."

அப்போது சுபேந்திரநாத் தாகூர் அங்கு வந்து அவர்களுக்கு அருகே அமர்ந்தான் : "எது ஆச்சரியமான விஷயம்?"

இருவரும் சொன்னார்கள். "அப்படியானால் நமது மாறுவேஷங்களில் நாம் இன்னும் அதிகக் கவனத்துடன் இருக்க வேண்டும். குரலைக் கூட மாற்றிக் கொள்ள வேண்டும்."

"லண்டனில் மாணிக்லால் திங்ரா நம்மைக் காட்டிக் கொடுத்த போதே நாமெல்லாம் மாட்டிக் கொண்டிருக்க வேண்டியது. மோசமான திருப்பம் ஏற்படாது காப்பாற்றியது சுக்லா தான். அவன் மட்டும் சமயோ

**ஜோதிர்லதா கிரிஜா**

சிதமாகத் தன் அப்பாவுக்கு லண்டன் வாழ் தேசபக்தர்களைத் திட்டிக் கடிதம் எழுதி உறையில் போட்டு ஒட்டித் தபாலில் சேர்க்க இருந்தது போல் தயாராக வைத்திருந்திரா விட்டால் நாம் மாட்டி இருப்போம். உற்சாகத்துடன் அதை எடுத்துப் பிரித்த வெள்ளைப் போலீஸ் அதிகாரிக்குப் பெரிய ஏமாற்றந்தான்."

பதினேழு ஆண்டுகளுக்கு முன்னால் லண்டனில் இந்தியா ஹவுசில் நடந்தவற்றை எண்ணி மூவரும் புன்னகை பூத்தார்கள்.

"ஆனாலும் அவ்வப்போது லண்டன் போலீசாரின் தொல்லைகள் ஏற்பட்டுக் கொண்டேதான் இருந்தன. ஒவ்வொரு தடவையும் மாட்டிக் கொள்ளாது அதிருஷ்டவசமாய்த் தப்பினோம்."

"தப்பி ஒரு வழியாகப் படிப்பையும் முடித்து இங்கு வந்தபின் பெரிதாய் என்ன சாதித்தோம், சில வெள்ளைக்காரர்களை அடித்துக் காயப்படுத்திய குற்றத்துக்காகத் தேடப்பட்டு வருகிறோம் என்பதைத் தவிர? இப்போது மாறு வேடங்களில் சுற்றிக் கொண்டிருக்கிறோம்."

"ராஜதானிதோறும் ஒரு சூர்யாசென்னாவது இருக்க வேண்டும். அப்போதுதான் அகில இந்திய அளவில் செயல்பட முடியும். இங்கே வங்காளத்தில்தான் பெரும்பாலான அதிரடிச் செயல்கள் நடக்கின்றன. அதனால்தான் வங்காளத்தை முதலில் ஒடுக்கி விட வேண்டும் என்பது வெள்ளைக்காரனின் சதியாக இருந்து வருகிறது. 1912இல் இந்தியத் தலைநகரத்தைக் கல்கத்தாவிலிருந்து தில்லிக்கு அரசு மாற்றியதன் நோக்கமே நம்மை ஒடுக்க வேண்டும் என்பதும், தலைநகரம் வங்காளத்தில் இருப்பது முக்கியமான வெள்ளையர்க்குத் தலைவலியாகலாம் என்பதும்தான்!

"டில்லி தர்பார் நடந்த பிறகு சில நாட்கள் கழித்து ஹார்டிஞ்சின் மீது குண்டை வீசி எறிந்தது ராஷ் பிகாரி கோஷ் என்று ரொம்பப் பேர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படி இல்லை. உங்களுக்குத் தெரியுமா?"

"அட.. இதென்ன புதுக்கதை? பின் யார் எறிந்தார்கள்?"

"ராஷ்பிகாரி கோஷ்தான் எறிவதாக இருந்தது. எனினும் இருவர் தயார் நிலையில் இருந்தார்கள். ஆனால் கடைசியில் அந்த வாய்ப்புக் கிடைத்தது அவருடைய மிக நெருங்கிய கூட்டாளி வசந்தகுமார் பிஸ்வாசுக்குத்தான். ஒரு பெண்ணைப் போல் சேலை உடுத்தி முக்காடிட்டுக் கொண்டு கூட்டத்தில் கலந்து குண்டை எறிந்து விட்டு ஓடி விட்டாராம். ஆனால் திட்டமிட்டது ராஷ்பிகாரி கோஷ் ஆனதால் சர்க்கார் இவருக்குத்தான் வலை வீசியது. ஆனால் அவர் அகப்படவில்லை."

"இன்னொன்று தெரியுமா உனக்கு... ராஷ்பிகாரி கோஷ் எப்படி ஜப்பானுக்குத் தப்பிப் போனார் என்பது? ரொம்பவும் தேடப்பட்டவராக இருந்ததால் அவர் குடுமியும் பூணூலுமாய் ஒரு புரோகிதர் வேடத்தில் கல்கத்தாவில் குண்டு வீச்சு நிகழ்ச்சிக்குப் பிறகு வாழ்ந்து வந்தார். பி.என். தாகூர் எனும் பெயரில் தனக்குத் தேவைப்பட்ட பயணக் காகிதங்களை அடைய ஏற்பாடு செய்து கொண்டார். அந்தச் சமயத்தில் கவி ரவீந்திரநாத் தாகூர் ஜப்பானுக்குப் போவதாக இருந்தது. இது கல்கத்தா முழுவதும் தெரிந்திருந்த செய்தி. எனவே ரவீந்திரநாத் தாகூரின் காரியதரிசியாகத் தம்மை வெளிப்படுத்திக் கொண்டு, அவருக்கு முன்னதாக



ஜப்பானுக்குப் போய், டோக்கியோவில் அவருக்கான தேவைகளைக் கவனிப்பதற்குச் செல்லுவதாக அவர் கூற, பத்திரமான பிரிட்டிஷ் பாஸ்போர்ட் அவருக்குக் கிடைத்து விட்டது!"

"அட!" எல்லாரும் மகிழ்ச்சியுடனும் பாராட்டும் வகையிலும் சிரித்தார்கள்.

அப்போது அகமத்கான் அங்கு வந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டான்.

"என்ன, அகமத், ஒரு மாதிரியாக இருக்கிறாய்?" என்று அவனது களையிழந்த முகத்தைப் பார்த்து ரத்னாகர் விசாரித்தான்.

"சற்று முன்னால் நியூ எம்பைர் தியேட்டருக்கு அருகே ஒரு சிறு இந்து - முஸ்லிம் கலவரமாம். அதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன்."

"இந்து - முஸ்லிம் ஒற்றுமை என்பது இனி ஒரு கனவுதான். அதுவும் பகற் கனவு." - ரத்னாகர் பெருமூச்சு விட்டான்.

"கல்கத்தாவில் சற்று முன்னால் 144 சட்டம் போட்டிருப்பது உங்களுக்குத் தெரியாதா? ரேடியோ கேட்கவில்லை?" என்ற அதட்டலான குரலைக் கேட்டதும் நால்வரும் திரும்பிப் பார்த்தார்கள். வலக்கையில் பிடித்திருந்த உருட்டுத் தடியால் இடது உள்ளங்கையில் தட்டியபடி காவல் துறை உடுப்பில் நின்றிருந்தவன் மாணிக்லால் திங்ரா என்பதை அவர்கள் புரிந்து கொண்டார்கள். திகைத்தார்கள்.

# 49

கங்கா வாய்விட்டுச் சிரித்தான்.

"அவனை எதுக்கும்மா கோவிச்சுக்கறே?" என்றார் ராஜாராமன். அவர் குரல் முழுவதையும் வியப்பு ஆக்கிரமித்திருந்தது. பவித்ரா அவ்வளவு கடுமையாய்க் குரல் உயர்த்தியும் வெடுக்கென்று பேசியும் அவர் கேட்டதே இல்லை.

"பவித்ரா படிப்பை முடிச்சுட்டுத் தீவிரவாத இயக்கத்துல சேரப் போறதாச் சொல்லிண்டிருக்கா. அவளைப் போய் நான் சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கோன்னு சொன்னா கோவந்தானே வரும், மாமா?" என்ற கங்கா மறுபடியும் சிரித்தான்.

"இதுல என்ன சிரிப்பு வேண்டியிருக்கு, கங்கா? சிரிக்காதே. எனக்குப் பத்திண்டு வருது. கடைசியில் நீயும் எல்லாரையும் போலப் பொண்ணுகளை மதிக்காத ஆம்பளைதான்னு தோண்றது. உங்களால மட்டுந்தான் சாதிக்க முடியும்னு நினைக்காதே. மேடம் காமா இல்லியா? அன்னி பெசன்ட் இல்

வியா? ஜான்சி ராணி இருக்கலையா? சித்தூர் ராணி எவ்வளவு பெரிய வீராங் கனை?" - பவித்திரா முடிக்குமுன் கங்கா சிரித்துக் கொண்டே இடைமறித்தான்.

"சித்தூர் ராணியும், ஜான்சி ராணியும் படைபலம் உள்ள ராணிகள், பவித்ரா."

"அன்னி பெசன்ட்? மேடம் காமா?.... கைக்குழந்தையும் கையுமா ஜெயிலுக்குப் போன படிக்காத அஞ்சலையம்மா? சூர்யா சென்னோட ரிபப்ளிகன் ஆர்மியில இருக்கிற பெண்கள்? தென் ஆப்ரிக்காவில காந்தியோட போராட்டத்துல கலந்துண்ட வள்ளியம்மா? இவாள்ளாம் கூட ராணிகளா!"

"அடியம்மா. உனக்கு இம்புட்டுக் கோவம் வருதே. கங்கா இப்ப என்ன சொல்லிட்டான்? உனக்குச் சீக்கிரம் கல்யாணம் பண்ணி வைக்கச் சொன்னான். முடியாதுன்னு சொல்லிட்டுப் போயேன். இந்தாத்துல யாரும் உன்னை வற்புறுத்தப் போறதில்லே. நாட்டுக்கு சுதந்திரம் இருக்கோ இல்லையோ, இந்த வீட்டுக்கு அது நிறைய இருக்கு... அது சரி, கங்கா, பெண்கள் சுதந்திரப் போராட்டத்துல குதிக்கக்கூடாதுன்னு நீ சொன்னதே இல்லியே? இப்ப என்ன திடீர்னு?" என்றாள் அஞ்சனா.

✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤

**ஒரு போரை முடிவுக்குக் கொண்டு வருவதற்கான சிறந்த வழி அதைத் தொடங்காமல் இருப்பதுதான்.**

**— ஐரிஷ் பழமொழி.**

**தகவல் : கே. நடராஜன்**

✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤

"கொஞ்ச நாள் ஜெயில்ல இருந்துட்டு வந்த சில தேசபக்தர்களை எனக்குத் தெரியும். பெண் கைதிகள் நடத்தப்பட்ற விதம் சரி இல்லைன்னு சொன்னா. உள்ளூர்ப் போலீசும் சரி, வெள்ளைக்காரப் போலீசும் சரி, அழகான இந்தியப் பெண்கள் கிட்ட முறைகேடா நடந்துக்கறாளாம். சின்னச் சின்ன அத்துமீறல்லேருந்து 'ரேப்' வரையில நடக்கிறதாம். இதை நம்ம பெண்கள் வெளியில சொல்லிக்குவாளா? இது ஒரு பெண்ணுக்கு எவ்வளவு பெரிய வேதனையான விஷயம்! அதனாலதான் சொல்றேன். இத்தனை நாளும் இப்படியெல்லாம் நடக்கறதுன்னு எனக்குத் தெரியாது. தெரிஞ்ச பிற்பாடு என்னோட அபிப்பிராயம் மாறிடுத்து."

"கொஞ்ச நேரத்துக்கு முந்தி எங்கிட்ட கன்சிஸ்டென்ஸி இல்லே, ஸ்திரபுத்தி இல்லேன்னு கேலி பண்ணினே. இப்ப பாரு. கொஞ்ச நாளுக்கு முந்தி நீ நினைச்சது சரி இல்லைன்னு இப்ப புரிஞ்சதும் மாத்திண்டுட்டே. அதே மாதிரிதான் நானும்" என்றார் ராஜாராமன்.

"வக்கீலாச்சே, மாமா, நீங்க. எப்படி மடக்கலாம்னு காத்திண்டிருந்து கரெக்டாப் பிடிச்சுட்டேள்!" என்று சிரித்தான் கங்கா.

"நீ சொல்றதெல்லாம் சரின்னே வச்சுப்போம். அதுக்கு நான் கல்யாணம் பண்ணிக்க வேண்டிய அவசியமென்ன? நான் கல்யாணம் பண்ணிக்கணும்னு புத்தி சொல்றதுக்கு நீ யாரு?" என்று கேட்டாள் பவித்ரா.

கங்கா தலையைக் குனிந்து கொண்டான்.

"என்னடி இது, பவித்ரா, எடுத்தெறிஞ்சு பேசறே? கங்காவைப் பார்த்தா நீ யாருன்னு கேக்கறே? ரொம்ப நன்னாருக்கு?" என்றாள் அமராவதி.

கங்கா இயல்பாகப் பவித்திராவை நோக்கிச் சொன்னான். "யாருன்னா கேக்கறே? சின்ன வயசுலேருந்து ஒரே பள்ளிக்கூடத்துல மட்டுமில்லாம இப்ப ஒரே காலேஜ்லயும் சேர்ந்து படிச்சிண்டிருக்கிற சிநேகிதன் நான்."

பவித்ரா தலை உயர்த்தி அவனை ஒரு பார்வை பார்த்துவிட்டு எழுந்து போய் விட்டாள். அவள் கண்கள் நொடிப் பொழுதில் நிறைந்து விட்டிருந்ததை யாரும் கவனித்துவிடக் கூடாது என்பதற்காகவே அவள் எழுந்து போய் விட்டதை உணர்ந்த கங்கா தனக்குள் மிகவும் சங்கடப்பட்டான்.

பவித்ராவைப் பின் தொடர்ந்து ராஜாராமனும் சென்றார்.

சில நொடிகள் மௌனத்தில் கழிந்ததும், "என்னப்பா ஒண்ணுமே சொல்லாம உக்காந்துண்டிருக்கே?" என்றாள் அஞ்சனா.

"இதோ பாரு, கங்கா. நீ எதுவும் சொல்லாமயே எங்களுக்குப் புரியறது. உனக்கும் பவித்ராவுக்கும் ஒருத்தரை ஒருத்தர் ரொம்பப் பிடிச்சுப் போயிடுத்து. சரிதானா? அதை ஒருத்தருக்கொருத்தர் சொல்லிண்டுட்டேள் போலேருக்கு. இப்ப இந்த சுதந்திரப் போராட்டத்துல குதிக்கிறதா இருக்கிறதுனால, நீ பின்வாங்கறே. மத்த எத்தனையோ தீவிரவாதிகள் மாதிரி உனக்கும் ஏதாவது ஆயிட்டா, என்ன பண்றது, பவித்ரா சின்னப் பொண்ணாச்சேன்னு திடீர்னு உம் மனசு உறுத்தத் தொடங்கி இருக்கு. அதானே?" என்றாள் அமராவதி.

கங்காவின் முகம் ஜிவு ஜிவு என்று சிவப்பேற மௌனமாயிருந்தான்.

ஓரிரு நிமிடங்களில் காலடியோசை கேட்டு மூவரும் திரும்பினார்கள். ராஜாராமன்தான் சிரிப்புடன் வந்து கொண்டிருந்தார்.

"பவித்ரா என்ன சொல்றா?" என்று அமராவதி ஆவலுடன் விசாரித்தாள்.

அவர் உடனே கூறாது கங்காவைப் பார்த்து "என்னப்பா, கங்கா? உன் லெட்டரையே எங்கிட்ட பவித்ரா காட்டிட்டா... என்ன வெக்கப்படறே? இன்னிக்கு நேத்திக்குத் தெரிஞ்சவாளா நாம? அதை எங்கிட்ட காட்டினதுக்காக அவகிட்ட கோவிச்சுக்காதேப்பா... அந்த லெட்டர் அவ கைக்குக் கிடைச்சுட்டதுக்கு அப்புறம் அது அவளோட சொத்து."

கங்கா பேசாமல் இருந்தான். ராஜாராமன் கடிதத்தின் சாரத்தை மகள்களுக்குச் சொன்னார். இருவரும் தெரியாதது போல் கேட்டுக் கொண்டார்கள்.

" 'அவன் சொல்றதெல்லாம் நியாயம்தானேம்மா? அதுக்கு எதுக்கு அழறே'ன்னு கேட்டேன். 'என்னால கங்காவைத் தவிர வேற யாரையும் மனசால கூட நினைக்க முடியாது. அவனாலயும் முடியாது, தாத்தா. சும்மாவானும் பொய் சொல்றான். இதுக்கு நீங்கதான் ஒரு வழி சொல்லணும், தாத்தா' அப்படிங்கறா....."

"நீங்க என்ன சொன்னேள்?"

"உங்கம்மா, பெரியம்மா எல்லாரோடயும் கலந்து பேசித்தான் முடிவு பண்ணணும். இதுக்கு இடையில நீ மனசு தளரக் கூடாது'ன்னு சொல்லிட்டு வந்திருக்கேன். கங்கா....."

"என்ன, மாமா?"

"உன்னால அவளை மறக்க முடியாது தானே?"

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே, மாமா. தேசத்துக்காக எல்லாத்தையும் மறக்கத்தான் வேணும். எதையும் துறக்கவும் வேணும்."

"அப்படியா? ரொம்ப சரி. உன்னோட லெட்டருக்கு அவ பதில் எழுதினாளா?"

"இதோ இருக்கு மாமா." - கங்கா தன் சட்டைப் பையிலிருந்து அந்தக் கடிதத்தை எடுத்து அவர் கையில் கொடுத்தான்.

அதை வாங்கி மகள்களும் கேட்பதற்காக இரைந்து படித்த பின், "அவ லெட்டரைப் பையிலேயே வெச்சுண்டு அலையற நீயா அவளை மறக்கப் போறே? உம்?" என்று சிரித்த ராஜாராமன் அதை அவனிடம் திருப்பிக் கொடுத்தார்.

அஞ்சனா, மெதுவான குரலில், "இப்படி காதலர்கள் எழுதிண்ட கடிதங்களை அவா கிட்டேருந்தே பிடுங்கிப் பெரியவா படிச்ச வீடு இது ஒண்ணுதான்னு நினைக்கிறேன்," என்று சிரித்தாள். கங்கா முகத்துச் சிவப்புக் குறையாமல் உட்கார்ந்திருந்தான்.

(தொடரும்)

***MAN'S VALUE IS IN THE FEW THINGS HE CREATES AND NOT IN THE POSSESSIONS HE AMASSES.***
**— KAHLIL GIBRAN**


'நாணல்' - ஒரு காட்சி

# நினைவலைகள் 28

ஒரு மனிதனின் உயர்வும் மதிப்பும் அவன் உருவாக்கித் தருகின்ற சிந்தனைச் செல்வங்களில்தான் இருக்கின்றன; அவன் சேர்த்து வைக்கும் பொருள் செல்வங்களில் இல்லை.

ஒரு திரைப்பட கர்த்தாவாக இதுவே எனது இலட்சியமாக இருந்திருக்கிறது; இருந்து வருகிறது.

'புன்னகை' திரைப்படம் எடுத்த போது எனக்கு ஏற்பட்ட பாதிப்புகள் எனக்கு இந்தக் கருத்தை உணர்த்தி, இதையே லட்சியமாகக் கொள்ளச் செய்தன.

அதேபோல் 'எதிர் நீச்சல்' 'நாணல்' ஆகிய இரண்டு திரைப்படங்களும் எனக்கு இரண்டு முக்கியமான பாடங்களைப் போதித்தன. அப்பாடங்கள் படத்தின் தலைப்பிலேயே அடங்கியும் இருக்கின்றன! முதலில் எனது 'நாணல்' அனுபவங்களைப் பற்றிக் கூறுகிறேன்.

நீர்க்குமிழி திரைப்படம் வெளியாகி வெற்றி பெற்ற நேரம். அடுத்த நாடகம் என்ன எழுதலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தேன். அப்போது 'Desperate Hours' என்கிற ஆங்கிலப் படத்தின் கதைச் சுருக்கத்தை நான் படிக்க நேர்ந்தது. ஒரு அமைதியான குடும்பம் வசிக்கும் வீட்டினுள், கிரிமினல் குற்றவாளிகள் சிலர் நுழைந்து, போலீசிலிருந்து தப்புவதற்காக அந்த வீட்டையே ஒரு தாற்காலிக அரணாக அமைத்துக் கொண்டு, குடும்பத்தில் இருப்பவர்களை வீட்டை விட்டு வெளியே அனுப்பாமல், துப்பாக்கி முனையில் அச்சுறுத்திக் கொண்டிருப்பார்கள். அவர்கள் செய்கின்ற திகில் நிறைந்த அட்டகாசங்கள்தான் Desperate Hours.

இந்தக் கரு எனக்கு மிகவும் பிடித்திருந்தது. இதை அடிப்படையாக வைத்து, நாடக மேடைக்கு ஏற்ப முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலைகளையும் சம்பவங்களையும் அமைத்து, கதையை எழுதி முடித்தேன்.

நாடக அரங்கேற்றத்துக்கு முன், ஒருநாள், தயாரிப்பாளர் ஜி. என். வேலுமணி அவர்கள் என்னைத் தேடி வந்தார். நாடகத்தின் கதையைக் கேட்டார்; சொன்னேன்; அவருக்கு மிகவும் பிடித்து விட்டது. இதே நாடகத்தைப் படமாகவும் தயாரிக்கலாமே என்றார். 'பாலும் பழமும்' போன்ற மிகப் பெரிய வெற்றிப் படங்களைத் தயாரித்த அவருடைய முடிவு எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது. நாடகக் கதையை சினிமாவுக்கு ஏற்ற வகையிலும் எழுதினேன்.

அந்த நாளில் தமிழ் நாடக மேடைக்கு முற்றிலும் வித்தியாசமான துணிச்சலான நாடகம் அது. நாடகத்தின் முழு சம்பவங்களும் ஒரு பங்களாவின் உட்புறமும் ஒரு போலீஸ் ஸ்டேஷனுக்குள்ளும் நடப்பதாகக் கதை அமைந்திருந்தது.

வழக்கமாக இதற்குத் தனித்தனியாக இரண்டு 'செட்' போடுவார்கள். பங்களாவில் காட்சி நடக்கும்போது போலீஸ் ஸ்டேஷன் இருக்காது; போலீஸ் ஸ்டேஷனில் காட்சி நடக்கும்போது பங்களா செட் இருக்காது.

நான் இதை மாற்றி ஒரே மேடையில் இரண்டு 'செட்'டுகளையும் ஒன்றின் பக்கத்தில் இன்னொன்றாக அமைத்தேன். நாடகம் முழுக்க அந்த இரண்டு செட்டுகளும் மேடையில் இருக்கும். பங்களாவில் சம்பவம் நடக்கும்போது, போலீஸ் ஸ்டேஷன்

**கே. பாலசந்தர்**

இருக்கும் பாதி மேடைப் பகுதி, திரைக்குப் பின்னால் இருக்கும். ஆனால் பெரும் பாலான நேரங்களில் இரண்டு 'செட்'டு களிலுமே சம்பவங்கள் நடந்து கொண் டிருக்கும். குற்றவாளிகள் எங்கே ஒளிந்திருக் கிறார்கள் என்று கண்டுபிடிக்க, போலீஸ் ஸ்டேஷனில் ஆலோசனைகளும் வேலை களும் மும்முரமாக நடந்து கொண்டிருக்கும். அதே நேரத்தில் பங்களாவினுள் குற்றவாளி கள் குடும்பத் தலைவரைத் துன்புறுத்திக் கொண்டிருப்பார்கள்.

ஒரே நேரத்தில் இரு இடங்களிலும் நடக் கும் வெவ்வேறு சம்பவங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும் நாடக அபிமானிகளுக்கு, இது ஒரு விநோதமான அனுபவத்தையும் பிரமிப்பையும் கொடுத்தது. இப்படி நாடக மேடையில் நேரில் அனுபவிக்கின்ற இந்த பரபரப்பைத் திரைப்படத்திலே தர முடி யாது.



"மாப்பிள்ளை வெளிநாட் டிலே படிச்சவருன்னு சொன் னதை நம்பி ஏமாந்துட் டோம்!"

"உண்மையிலேயே அவரு வெளிநாட்டிலே படிக்க லியா?"

"படிச்சிருக்காரு, மூணாவது வரைக்கும்!"

- எஸ். ராஜேந்திரன்

ஆங்கிலத்திலேதான் இத்தகைய Thriller கதைகள் அதிகமாகப் படமாக்கப்பட்டு வெளிவந்து கொண்டிருந்தன. ஆங்கிலப் பட Thrillerகள் அதிகம் போனால் ஒன்ணே கால் மணி அல்லது ஒன்னரை மணி நேரம்தான் ஓடும். ஆகவே தொடக்கம் முதல் இறுதிவரை ரசிகர்கள் இருக்கையின் விளிம்பிலேயே அமரத்தக்க வகையில், விறுவிறுப்புடன் படம் எடுக்க அவர்களால் முடிந்தது.

ஆனால், தமிழ் சினிமா குறைந்தபட்சம் இரண்டரை மணி நேரம் ஓட வேண்டியது ஒரு வியாபாரக் கட்டாயம். திகில் என்கிற உணர்வை மட்டுமே கொண்டு, இவ்வளவு நீண்ட காலம் ரசிகர்களைத் திருப்திப்படுத்த முடியாது. ஆகவே செண்டிமெண்ட், நகைச் சுவை, பாடல் காட்சிகள் என்று பலவிதமான சுவைகளும் சேர்த்து, திரைக்கதை அமைக்கப் பட்டது. அந்தச் சம்பவங்கள் எவையும் கதையின் ஓட்டத்தைத் தடுக்காமல், அதற்கு மேலும் சுவையூட்டக்கூடிய முறையில் இணைத்திருந்தேன்.

என்னுடைய படங்களில், பாடல் காட்சி கள், கதையின் மிக முக்கியமான கட்டங் களில் கதையோடு ஒன்றிப் போகின்ற வகை யில் அமைப்பதில் அதிகமான அக்கறை செலுத்துவது என் வழக்கம்.

இந்தப் படத்தில் ஒரே பாடல் இரண்டு இடங்களில் வரும்.

**குயில் கூவித் துயில் எழுப்ப**
**கொடியரும்பு கண் விழிக்க....** என்று தொடங்கும் பாடல் அது. படத்தின் தொடக் கத்தில் அந்தப் பாடல் இனிமையான சூழ் நிலையில் அமையும். கதாபாத்திரங்களை ஒவ்வொருவராக அறிமுகப்படுத்தும் ஒரு அமைதியான பாடல் காட்சி. ஆனால் அதே பாடல், வீட்டினுள் வலுக்கட்டாயமாகத் தங்கியிருக்கும் குற்றவாளிகளின் கொடுமை மிகும் சூழ்நிலையில் மீண்டும் ஒலிக்கின்ற போது மனத்தை நெகிழச் செய்யும்.

'நாணல்' திரைப் படத்தை ஒருவேளை நான் இன்றைக்கு இயக்கினால் முதல் காட்சியிலிருந்து முடிவு வரை பல மாறுதல் களைச் செய்யத் தோன்றும். அது வளர்ச்சி பெறும் எல்லா இயக்குநர்களுக்கும் தோன்றக்கூடிய ஓர் உணர்வு தான். ஆனால் இந்தப் படத்தை முப்பது ஆண்டு களுக்குப் பிறகு, நான் சமீ பத்தில் மறுபடியும் பார்த்தபோது ஒன்று மட்டும் நன்றாகப் புரிந்தது:

விஞ்ஞான வளர்ச்சிக்கேற்ப தொழில்நுட் பங்கள் மாறலாம். ஆனால் மனித உணர்வு கள் மாறுவதில்லை; இன்பமும் மகிழ்ச்சியும் சோகமும், இன்ன பிற உணர்வுகளும் அப்படியேதான் இருக்கின்றன. அவற்றுக்குப் படத்தில் முக்கியத்துவம் தர வேண்டியதும் அவசியமாகிறது.

"ஒரு சாதாரண படத்தை சினிமா ஸ்கோப்பில் பார்க்கும்போது மோசமான படமாகத் தெரிகிறது; ஒரு மோசமான படம் இரண்டு மடங்கு அகன்ற திரையில் (70 mm) இரண்டு மடங்கு மோசமாகத் தெரிகிறது" என்று ஒரு திரைப்படப் பிரமுகர் கூறியிருக் கிறார். இதை நினைவில் கொண்டால், தொழில்நுட்ப முன்னேற்றத்துக்கு இணை யாக, மனித உணர்வுகளை வெளிப்படுத்தும் ஆற்றலிலும் நாம் முன்னேற வேண்டியதன்

அவசியம் புரியும்.

'சர்க்காரமா' என்கிற அகன்ற திரை, பார்வையாளர்களைச் சுற்றி எல்லாப் பக்கங்களிலும் வட்டமாக இருந்தது. நாலா திசைகளிலும் (360 டிகிரிகளிலும்) நம்மைச் சுற்றிலும் நடப்பனவாக சினிமா பார்க்க முடியும். ஆயினும் இந்த விஞ்ஞானக் கண்டுபிடிப்பு மக்களால் நிராகரிக்கப்பட்டது. காரணம் இந்த விஞ்ஞான வளர்ச்சி பெரும் பிரமிப்பை ஏற்படுத்தியதே தவிர, ரசிகர்களைக் கதையுடன் ஒன்றிப் போகச் செய்கின்ற உணர்வுகளை ஏற்படுத்தவில்லை.

'நாணல்' படம் திரைக்கு வருவதற்கு முன்பு, சில 'சென்ஸார்' சங்கடங்களை நான் சந்திக்க நேர்ந்தது. அடிப்படைக் கதையிலேயே அவர்கள் கையை வைத்தார்கள்.

நீதிபதி ஒருவரால் தவறாகத் தண்டிக்கப்பட்ட சில குற்றவாளிகள், சிறையிலிருந்து தப்பி, அவர் மீது கோபம் கொண்டு, அவர் வீட்டிற்குள்ளேயே புகுந்து அவரைப் பழி வாங்க முயற்சி செய்வதுதான் நாடகத்தின் கதை. முறையாக போலீஸ் லைசென்ஸ் பெற்று நடத்தப்பட்ட நாடகம்தான், அமோக வெற்றி பெற்ற நாடகம்.

ஆனால் திரைப்படமாக எடுத்து சென்ஸாருக்கு அனுப்பப்பட்டபோது, ஒரு நீதிபதியினால் தவறாகத் தண்டிக்கப்பட்ட குற்றவாளிகள் நீதிபதியைப் பழிவாங்க முயற்சிக்கிறார்கள் என்கிற இந்தக் கதை, உண்மையான குற்றவாளிகளிடம் கூட இத்தகைய பழிவாங்கும் உணர்ச்சியினைத் தூண்டிவிடக்கூடிய சாத்தியக்கூறு இருப்பதால், கதையை மாற்றியமைத்துப் படமெடுத்து, சென்ஸாருக்கு மீண்டும் வாருங்கள் என்று உறுதியாகச் சொல்லி விட்டார்கள்!

நான் இடிந்து போனேன்; தலையைப் பிய்த்துக் கொண்டு நின்றேன். படம் வெளி வருவதற்கு இன்னும் ஒரு வார காலமே இருந்தது. என்ன செய்வதென்று புரியவில்லை.

சென்ஸாருக்கு எதிராக நாம் அப்பீலுக்குப் போகலாம் என்று தயாரிப்பாளர் வேலுமணி அவர்களிடம் சொன்னேன். சிறிதும் பதற்றப்படாமல் வேலுமணி அவர்கள் படத்தின் தலைப்பையே எனக்கு நினைவுபடுத்தினார்.

நாணலாக நான் வளைந்தேன்.

'ஜட்ஜ்' என்று வருகின்ற இடங்களிலெல்லாம்... 'துரை' என்கிற மாற்றுச் சொல்லைப் பேச வைத்து படம் முழுவதும் Dub செய்தேன். பழிவாங்க வந்த முரடர்களுக்கும் கதாநாயகனுக்கும் ஏதோ ஒரு பழைய விரோதம் இருப்பதாகச் சொல்லி, அதை ஒரு சிறிய காட்சியாக அமைத்து ஒரே நாளில் அதன் படப்பிடிப்பை முடித்துப் படத்துடன் இணைத்தேன்.

சென்ஸார் சர்டிபிகேட் வழங்கப்பட்டது.

ரசிகர்களுடன் அமர்ந்து தியேட்டரில் நான் படம் பார்த்தபோது பொதுவாக நல்ல வரவேற்பு இருந்ததை உணர முடிந்தது. ஆனால் மாறுபட்ட இந்த திரைச் சித்திரத்தை முழுமையாக ரசிக்க முடியாமல் சிலர் திணறினார்கள்.

சென்ஸார் குறுக்கீடும் அதற்காகவே நான் செய்த மாற்றங்களும் இல்லாமலிருந்திருந்தால், மிகப் பெரிய வெற்றி பெற்றிருக்கும் என்று சிலர் சொன்னார்கள்.

ஜி. என். வேலுமணி அவர்கள் சொன்னார்கள் : "இன்னும் பத்து வருடம் கழித்து இந்தப் படத்தைத் தயாரித்து வெளியிட்டிருந்தால் மகத்தான வெற்றி பெற்றிருக்கும்" என்று.

இதற்குப் பத்து ஆண்டுகள் கழித்து, நான் இயக்கி வெளிவந்த படம் 'அவர்கள்'.

"இன்னும் பத்து ஆண்டுகள் கழித்து வந்திருந்தால் இந்தப் படம் பெரும் வெற்றி பெற்றிருக்கும்" என்று அந்தப் படத்திற்கும் அப்பொழுது கருத்துத் தெரிவித்தார்கள்.

ரசிகர்களின் ரசனைக்காகத்தான் படம் எடுக்கிறோம். ரசிகர்கள், ரசனையில் பின்னால் போய் விடாமல் அவர்களது ரசனையை உயர்த்தும் முன்னோடியாக இருப்பதில் தான் எனக்கு ஆத்மதிருப்தி கிடைக்கிறது.

(தொடரும்)

படம் உதவி : **பிலிம் நியூஸ் ஆனந்தன்**

---



### அழுதது எப்படி?

**'காந்தி மகான் கதை' என்று ஒரு புத்தகம் போட்டார் கொத்தமங்கலம் சுப்பு. புத்தக விற்பனை படு டல். ஆனால், அவரே காந்திஜி கதையை வில்லுப்பாட்டில் சொல்வதைக் கேட்க திரளாய் மக்கள் வருவார்கள். மிக உருக்கமாய்க் கதை சொல்லும்போது, குறிப்பிட்ட சில இடங்களில் கண்ணீர் விட்டுவிடுவார் சுப்பு. 'உங்களுக்கு ஒவ்வொரு தடவையும் கதை சொல்லும்போது, இப்படி அழ முடிகிறதே, எப்படி?" என்று சாவி அவரை ஒரு தடவை கேட்டாராம். "விற்காத என் புத்தகங்களை நினைத்துக் கொள்ளுவேன்; கண்ணீர் தானாக வந்து விடும்!" என்றாராம் கொத்தமங்கலம் சுப்பு!**

**- வழக்கறிஞர் கிருஷ்ணசுவாமி எழுதிய 'மேலே ஒரு நீதிபதி' புத்தக வெளியீட்டு விழாவில் சாவி சொன்னது.**

**ரசித்தவர் : மௌஷ்மி**

"ஆமாம்... இதான் ராமண்ணா வீடு... நீங்க யாரு?"

"நா புதுசா வந்திருக்கற சூப்ரெண்டு. அவர் ஆபீஸ் வந்து ஒரு மாசத்துக்கு மேல ஆச்சு."

கிழவி 'ப்ச்' எனவும் உள்ளிருந்து ஒரு பெண் எட்டிப் பார்க்கவும் சரியாயிருந்தது. "யாரு?"

கிழவி அவளை விரட்டினாள்... "போ... போ... குடிக்க ஏதாச்சும் கொண்டா. அவன் எங்க போறதாச் சொன்னான்?"

"தெரியலியே.... இங்க தானே இருந்தாரு?"

கிழவி பரிகாசம் பண்ணினாள்... "இங்கதான் இருந்தாரு! நீ இப்பிடியே இரு! நல்லா வாய்ச்சிருக்கா பாரு! அவனோட ஆபீசரு இவுரு... ஏதாச்சும் குடிக்க கொண்டா... நீங்க உக்காருங்க..."



"பரவால்ல...பாட்டிம்மா... நான் சாப்புட்டுத்தான் வந்தேன்... ஏன் ஆபீஸுக்கு ராமண்ணா வரல... ஒடம்பு கிடம்பு?"

"அதெல்லாம் கொட்டாப் புளியாட்டம் இருக்கான். எங்க தலையெழுத்து... எங் கண்ணும் அவிஞ்சு போச்சு... இன்னும் எத்தினி நாளோ... ஆமா... நீங்க ஏன் வந்திருக்கீங்க. ஏதாச்சும் விவகாரம் பண்ணிட்டானா அவன்?"

"அப்டின்னு இல்ல... சொல்லாம கொள்ளாம லீவு, ஒரு மாசமா... சம்பளமும் வராது... என்னன்னு..." நிறுத்திக் கொண்டேன்...

கிழவி எங்கோ வெறித்தாள்.

வீடு பெருக்கப்படாமல் இருந்தது. சாம்பல் சிதறல்களுடன் பீடித் துண்டுகள் அங்கங்கே...

# புது

இரண்டு குழந்தைகள் என்னைப் பார்த்தபடி உள்ளே போனார்கள். மூத்தது பெண்... பிஸ்கட் வாங்கிப் போயிருக்கலாம். தோன்றவில்லை. குழந்தைகள், ராமண்ணாவின் மனைவி, தாயார் அனைவரும் வறுமைக்குண்டான அழுக்கில் இருந்தனர். முடை நாற்றத்தைச் சிரமத்துடன் பொறுத்துக் கொள்ள வேண்டியிருந்தது.

ராமண்ணாவின் உத்தியோகத்திற்கு இது மாறானது. எப்படி இந்தக் கோளாறு?

ராமண்ணாவின் மனைவி கொடுத்த காப்பி தம்ளரின் விளிம்பில் அமர்ந்திருந்த காப்பித்தூள் கடனாகவும் அவசரமாகவும் வாங்கப்பட்டதைக் காட்டியது. மென்மையாக மறுத்திருக்கலாம் நான்.

நல்ல வேளை, அவள் உள்ளே போய் விட்டாள்... கிழவியின் பார்வைக் கூர்மையின்மை நான் முகஞ்சுளிக்க அனுகூலமாக இருந்தது. இதற்கெல்லாம் காரணமான ராமண்ணாவின் மீது எரிச்சல் கிளம்பியது.

"ஏன் இப்படிப் பண்றாரு? யாரும் நல்லதா சொல்ல மாட்டேங்கறாங்க. நல்ல சம்பளம்... இப்படி வராமலே இருந்தா வேலைக்கே ஆபத்தாயிடும். நான் இருக்கற ஆபீஸ்ல என் கீழ இருக்கற ஒருத்தருக்கு இப்படி ஆக வேணாம்னு பாக்கறேன்."

என்னையறியாமல் என் குரலில் கடுமை ஏறியது.

உள்ளே விசும்பும் ஒலி கேட்டது... கிழவியும் கேட்டு விட்டாள்.

"ஆமா... அழுதழுதே ஏழவு வீடா ஆக்கு! துப்பு கெட்டவ.. எவ்ளோ சமத்தா இருக்கா ஒவ்வொருத்தியும்!"

என்னை உட்கார வைத்துக் கொண்டு அவ்வாறு பேசுவது சங்கடத்தை ஊட்டியது. எழுந்து விடலாமா?

"பாட்டி... போன தடவை ஏ.ரஞ்சித் குமார் என்னை பீட் பண்ணான்ல... இப்ப நான் அவனை அடிச்சுட்டேன்- ஏழு மார்க்குல. எனக்கு ஃபஸ்ட் ரேங்க்."

ராமண்ணாவின் பெண் ரேங்க் கார்டைக் கையில் கொடுத்ததும் கிழவி தடவிப் பார்த்தாள்... லேசாய்

**சுப்ரமண்யன் ரவிச்சந்திரன்**



# வாழ்வு

மலர்ந்தான்.

"ஹலோ பேபி. ஒம் பேரு என்னம்மா?"

"சரோஜா, அங்கிள்."

"எத்தனாவது படிக்கறே?"

"ஆறாவது பீ..."

திடீரென்று உரையாடல் தடைப்பட்டது. அந்தப் பகுதி முழுதும் இனிப்பாய் ஸ்பிரிட்டின் வாடை நிறைந்தது. ராமண்ணா! அவன் அமர்வதற்காக நான் எழுந்து கொண்டேன்.

''அப்பா...'' என்றது சரோஜா என்னிடம்.

"வாங்க ராமண்ணா... நான்தான் புது சூப்ரெண்ட்." கையை அபத்தமாக நீட்டி விட்டுப் பின்னிழுத்துக் கொண்டேன்.

"வாங்க சார். சரோ, அம்மாட்ட சொல்லி காப்பி!" விரல் சொடுக்கியவனை அமர்த்தினேன்.

"ஆச்சு. வாஸ் வெய்டிங் ஃபார் யூ."

"என்னா மேட்டர் சார்?" என்றவாறு அவன் பீடியைப் பற்றவைத்தான். திடுக்கிட்டேன்-இவனுக்குப் பொது அறிவே இல்லையா? என்ன ஆகி விட்டது? தெரியாமல்தான் செய்கிறானா; அல்லது திமிரா?

''என்னிக்கு ஆபீஸ் வர்றீங்க...?''

''அதானா? வர்றேன். வர்றேன்'' பூம் பூம் மாடாய்த் தலையசைத்தான்...

முட்டாள்.. இவன் என்னவோ ஒரு பிரமுகர் மாதிரியும், என் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்க இவனை அழைப்பதைப் போலவும் அல்லவா சலித்துக் கொள்கிறான்.

"மிஸ்டர் ராமண்ணா.. மேல ஆளு இருக்குன்ற தெம்புலதான் நீங்க இப்படிப் பண்றதாக் கேள்விப்பட்டேன். ஒழுங்கா நீங்க ஆபீஸ் அட்டெண்ட் பண்றது நல்லது. நாளைக்கு ஆக்ஷன்னு நான் இறங்கினா ஒருத்தரும் ஒங்க பின்னால வரமாட்டாங்க. சொல்றதச் சொல்லிட்டேன்..."

ராமண்ணா பேசாமல் உள்ளே போனான்.. உள்ளே அவன் குரல் யாரையோ மிரட்டிக் கொண்டிருந்தது.

கிழவி அவனுக்குக் கேட்காத வகையில் இறைஞ்சினாள்.

"நீங்கதான் அவனுக்குச் சொல்லித் திருத்தணும்.. ஒண்ணும் பண்ணிடாதீங்க.. ஒழுங்கா இருந்தவன்தான்... சேர்வார் சேர்க்கை-பெரிய மனசு பண்ணுங்க..."

"அவர் நடத்துக்கறதுல இருக்கு பாட்டி... நா வரேன்."

என் அறையிலும் ராமண்ணாவின் எண்ணமாகவே இருந்தேன். ஹெட்க்ளார்க் காலையில் சொன்னது ஞாபகம் வந்தது.

"ஜித்தன் சார்... பேசிக்கிட்டே இருக்கறச்சே ஒங்க கண்ணு முழியத் தோண்டி எடுத்துட்டுப் போயிடுவான் சார்... மெட்ராஸ்ல இருக்கற மட்டும் குதிரையும், தண்ணியுமா வாழ்ந்தான். இங்கயும் தண்ணிலதான் தளும்ப தளும்ப ஆபீஸ் வருவான். வேலைக்கு அஞ்சறவன் இல்ல- ஊதித் தள்ளிடுவான். ஆனா ஒண்ணு. ஆளு வரணும்..."

இந்த ஊரில் ஏதேனும் புனர்வாழ்வு மையம் இருந்தால் அதில் ராமண்ணாவைச் சேர்க்க வேண்டும். குடியிலிருந்து அவனைப் பிரித்து விட்டால் சரியாகிவிடும். யாரும் கெட்டவரில்லை...

அடுத்த நாள் ஆபீஸ் வந்த ராமண்ணாவைப் பார்த்து ஆபீஸே அதிசயப்பட்டது. என்னைப் பார்த்து நமுட்டுச் சிரிப்பை உதிர்த்தது. ராமண்ணா நேரே என்னிடம் வந்தான். முகமன் கூறாமல் சகஜமாகப் பேசினான். வெகுநாள் பழகியவனைப் போல்....

"நீங்க பாட்டுக்கு வந்துட்டுப் பூட்டிங்க.. பேஜாராயி



டுச்சு... தூங்க உடாம தல மாட்டுல அவளும் கெழவியும் ஒரே ராவடி... கைக்கு ஆப்ட்டது சரோஜாதான். தொம்னு நாலு வச்சேன்."

"ஆல்ரைட் நீங்க செக்‌ஷனுக்குப் போங்க... லீவ் பீரியடுக்கு மெடிகல் சர்டிஃபிகேட் குடுத்துடுங்க..." அதிகாரியானேன். இடம் கொடுத்தால் எல்லாம் கெட்டுவிடும்.

ஒன்று, இரண்டு... பத்து நாட்களாகத் தொடர்ந்து வருகிறான்... ஆபீஸில் அதே பேச்சு...










"சூப்ரண்ட் சார்... ஒரு எழுநூறு ரூபா வேணும் சார். ஃபீஸ் கட்டணும். எக்ஸாம் ஃபீஸ்..." ராமண்ணா கேட்கையில் அவன் முதுகின் பின் நின்றிருந்த ஹெட்கிளார்க் 'தராதே' என்று சமிக்ஞை செய்தார்.

"எழுநூறு?" தடுமாறினேன்.

"இன்னும் பத்து நாள்ல பே வந்து டும் வாங்கிக்கலாம்."

நான் பணத்துக்காகப் பையில் கையை விட்டேன்.. போச்சு போச்சு என்று அபிநயித் தார் ஹெட்க்ளார்க்.

நன்றி கூடச் சொல்லாமல் ராமண்ணா ஓடினான்.. பரவாயில்லை.. குடும்பம், குழந்தை என்ற அக்கறை இருந்தால் சரி...

அடுத்தநாள் ராமண்ணா அலுவலகம் வரவில்லை... அதற்கடுத்த நாள்... இல்லை.. மீண்டும் சிவப்பு மை வருகைப் பதிவேட்டில் அணி வகுத்தது.

அவன் கேட்டானே என்று கொடுத் தேனே தவிர எனக்கு எழுநூறு ரூபாய் இல்லாமல் சிரமமாகப் போனது.

**நா**ன் போனபோது ராமண்ணாவின் பெண் வாசலில் நான்கைந்து சிறுவர்களுக்கு மத்தியில் அமர்ந்து பாடம் படித்தாள்... அவள் சொல்லச் சொல்ல வெவ்வேறு கருதி களில் சிறுவர்கள் இரைந்தனர்.

என்னைக் கண்டதும் ஓடிவந்தாள்... "வாங்க அங்கிள்."

"அப்பா எங்கமா சரோஜா...?"

"ஒக்காருங்க அங்கிள் தம்பீ... சேர் எடுத் துட்டுவா.."

ராமண்ணாவின் மகன் தூக்க முடியாமல் கொண்டு வந்த ஸ்டூலை நான் வாங்கி அதில் அமர்ந்து கொண்டேன்.

"அப்பாவ மெட்ராஸ்ல ஆஸ்பிடல்ல சேத்திருக்காங்க அங்கிள்... பெரியப்பாட் டேந்து இன்னிக்குத்தான் தபால் வந்துச்சு..."

"அய்யய்யோ! என்னவாம்?"

"ச்... எப்பவும் போலத்தான்... குடிச்சு, புண்ணாயிடும். வயித்து வலி தாங்காம ஆஸ்பத்திரி போவாரு... பெரியப்பா திட் டிட்டே பாத்துப்பாரு.. ரெண்டு மாசம் மருந்து சாப்புட்டா நல்லா ஆயிடும்." சரோஜா நிறுத்தினாள்.

"ஆருடி சரோ...?" கிழவி சுவரைத் தட வியபடி வாசலுக்கு வந்து விட்டாள்.

"சூபரெண்ட் அங்கிள் பாட்டி..."

"பாவம் நீங்க.. அவன் ஓடி ஓடிப் போயி டறான்... நீங்க பொறுப்பா தேடி அழச் சிட்டுப் போவ வந்துடறீங்க..." கிழவி நிஜ மாகவே வருத்தப்பட்டாள்.

"அதெல்லாம் இல்ல... சும்மா இந்தப் பக்கம் வந்தேன் பாட்டி... சரோஜா எக்ஸாம் எழுதிட்டியா. எக்ஸாமுக்கு ஃபீஸ் கட்ட

அப்பாகிட்ட பணம் குடுத்தேனே- கட்டினாரா...?"

கிழவி அதிர்ந்து போனாள்... "என்னது...பீசு கட்ட குடுத்தீங்களா? அவன் நாசமாத்தான் போவான்! சார்.. ஒண்ணு கேக்கணும்னு.. அவன் எழுதிக் குடுத்தா அந்த வேலைய எம் மருமவளுக்குக் குடுப்பாங்களா? அரை வயிறாச்சும் குடும்பம் சாப்புடும்..."

"அதெல்லாம் கெடையாது... அவன் செத்தாத்தான் குடுப்பாங்க!" என்றேன் நிதானமிழந்து...

சரோஜா அழுதபடியே வந்து ஆபீசில் சொன்னாள். ராமண்ணா இறந்து விட்டானாம். சரோஜாவின் பாவாடையைப் பிடித்தபடி அழக் கூடத் தோன்றாமல் நிற்கும் ராமண்ணாவின் மகன்.

ஆபீஸில் அனைவரும் கூடினர். கையடக்கமாய் ஒரு மாலை...அதை ராமண்ணாவின் மேல் சார்த்திவிட்டு, பாதிப்பின்றி இயல்பாய்க் கலைந்தனர்.

எழுதி, சிரமம் எடுத்ததில் ராமண்ணாவின் மனைவிக்கு வேலை தரப்பட்டது. அவள் வீட்டிலிருந்ததற்கும், ஆபீசில் பணிபுரிந்ததற்கும் வேறுபாடு தெரிந்தது. புதுமுகம் என்றே சொல்ல முடியாத அளவு வேலை கச்சிதமாக இருந்தது.

அன்று ராமண்ணாவின் நினைவு நாள்... நான் மட்டும் அழைக்கப்பட்டிருந்தேன்.

வீடு மாறியிருந்தது. அழுக்கோ நாற்றமோ இல்லை. குழந்தைகள் பூசியது போல் இருந்தனர். ஸ்கூலுக்கு ரிக்ஷா வருகிறதாம்.

விருந்தினைப் போல உணவு வகைகளிலும் ஒரு நளினம் இருந்தது. ராமண்ணாவின் பழைய நாள் படமொன்று விஸ்தரிக்கப்பட்டு விளக்குகளால் ஜோடிக்கப்பட்டிருந்தது.

கிழவி கூட முன்பிருந்த தள்ளாமையிலிருந்து விடுவிக்கப்பட்டவளாயிருந்தாள். அதிகம் சிடுசிடுக்காமல் இருந்தாள். சம்பாதிக்கும் மருமகளைக் கண்ட அச்சமாக இருக்குமோ?

வாசலில் நானும் ராமண்ணாவின் மனைவியும் மட்டும் இருந்தோம். குழந்தைகள் எங்கோ கிளம்பிப் போயிருந்தன.

"மேடம்... தேங்க் யூ... நான் கிளம்பறேன்.. ஒங்கள், இந்த வீட்டை, இதையெல்லாம் பாக்கறச்சே மனசுக்குக் கொஞ்சம் ஆறுதலா இருக்கு. குடும்பம் நிமிரணுங்கறதுல பெண்களோட பங்கு மகத்தானது.. யு ஹாவ் டன் வெல்... ஒங்களுக்கு எதாவது ஹெல்ப்னா..."

நான் வாக்கியத்தைத் தொடர முடியாமல் போனது. மேடம் அழுது கொண்டிருந்தாள்..

"அயம் சாரி...நான் எதாச்சும் தப்பா சொல்லிட்டேனா...?" பதறிப் போனேன்.

"அது இல்ல சார்.. அவர் ஆஸ்பத்திரில இருக்கறச்சே எங்கிட்ட சொன்னாரு- ஒடம்பு நல்லா ஆனதும் நான் ஒழுங்கா இருக்கேன்னு.. இதுவரைக்கும் அப்படிச் சொன்னதில்ல... அதுக்குள்ள.." மீண்டும் அழுதாள்...

ராமண்ணாவின் படத்தைப் பார்த்தேன்... அது எவ்வித மாற்றமும் இன்றி அப்படியே இருந்தது.

பெண்களுக்குத்தான் எவ்வளவு நம்பிக்கை!

## சைனா பால்

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு ஹாங்காங் நகரவாசிகள் சத்துணவின்றி நோய்களால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தனர். ஒரு நாள் லோ கிவி சாங் என்ற சீனாக்காரர் 'சைனாபால்' என்ற ஒரு பானத்தைப் பாட்டிலில் அடைத்து விற்பனை செய்தார். முதல் நாள் அவர் கொண்டு சென்ற ஒன்பது பாட்டில்களும் விற்பனையாகவே, முனைந்து அந்தப் பால் வியாபாரத்தை வளரச் செய்து பெரும் பணக்காரரானார். அந்தப் பாலில் இருந்த புரதச்சத்து ஹாங்காங் வாசிகளுக்குத் தெம்பைக் கொடுத்தது. குறைந்த செலவில் அவர்களுடைய உடல் வலுவைப் பெற்றது.

இப்போது விடசாய் ப்ராடக்ட்ஸ் என்ற கம்பெனி இந்தப் பாலை விற்பனை செய்கிறது. சென்ற ஆண்டில் அந்த நிறுவனத்தின் லாபம் அறுநூற்று முப்பத்தைந்து கோடி ரூபாய்! லோவின் குடும்பத்தினருக்கு இந்த நிறுவனத்தில் முப்பத்திரண்டு சதவீதம் பங்கு உண்டு.

சைனா பால் என்பது வேறொன்றுமல்ல! சோயா பீன்ஸிலிருந்து எடுக்கும் பால்தான்.

-'சண்டே கிரானிகலிலிருந்து' என். பங்கஜம்





• பரஸ்பரம்... • .....பேசிக் கொள்ளாதது...

(படம் - நன்றி : தினமலர்)

ராஜாஜி போன்ற அறிஞர்கள் எச்சரித்த போது அரசு திருந்தியிருந்தால் இன்று இதே அளவுக்கு அயல்நாடுகள் நமக்குக் கடன்பட்டிருக்கும்!

● பி. ராஜன், தாராபுரம்.

? "அர்ஜுன்சிங்குக்காக தற்கொலைப் படையாகவும் மாறத் தயாராக உள்ளோம்" என்று வாழப்பாடி கூறியுள்ளாரே?

! இனி மாறுவது என்ன? ஏற்கெனவே ஹராகிரி பண்ணிக் கொண்டாகிவிட்டது!

# குடியரசுதின விழாவில் ஆளுநரும் முதல்வரும் பேசிக் கொள்ளாதது..?

● த. முகிலன், மணலூர்பேட்டை.

? தொண்டர்கள் இல்லாத கட்சி இருக்க முடியுமா?

! முடியும்; ஆனால் குண்டர்கள் இல்லாத கட்சி இருக்க முடியாது - இன்றையச் சூழ்நிலையில்.

● ஆர். சங்கரநாராயணன், சென்னை.

? ரேஷன் கடைகளில் கெரசின், சர்க்கரை, அரிசி வாங்கும்போது, சோப்பு, டூத்பேஸ்ட், வாஷிங் பவுடர் போன்றவற்றைக் கட்டாயப் படுத்திக் கொடுப்பது...?

! வடிகட்டின அயோக்கியத்தனம். இதைத் தடுக்க இயலாத அரசு ஆட்சியில் இருக்கும் தகுதியையே இழக்கிறது. சொல்லிக் கொள்வது என்னவோ ஏழைகளுக்காகப் பாடுபடுவதாக!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? குடியரசுதின விழாவில் அருகருகே அமர்ந்து கொண்டு கவர்னரும் முதல்வரும் பரஸ்பரம் பேசிக் கொள்ளாதது பற்றி...?

! அவர்கள் அமர்ந்திருந்த நாற்காலிகளில் ஊர்ந்த எறும்பார் ரிப்போர்ட்படி அவர்கள் முணுமுணுத்தது பின்வருமாறு:

ஜெ : என்கிட்டயா வாலாட்டறே; ஒழிச்சுக் கட்டிப்புடறேன், பாரு!

செ : என்னையா அவமதிக்கறே; கேஸ் போட அனுமதி எப்ப வழங்குவானோ; எப்ப டிஸ்மிஸுக்கு சிபாரிசு பண்ணுவானோன்னு பதறிக்கிட்டே இருக்கப் பண்ணறேன் பாரு!

● தேன்மொழி மன்னவன், கோனாபட்டு.

? இன்று இந்தியாவின் வெளிநாட்டுக்கடன் 2 லட்சத்து 86 ஆயிரம் கோடி ரூபாயாமே?

! அப்படின்னா எவ்வளவு கஷ்டமான பொறுப்பை ம.மோ.சிங் ஏத்துக்கிட்டிருக்கார் என்பது புரியணுமே. அறுபதுகளின் தொடக்கத்திலேயே

● சந்திரா, மதுரை. □

? பிராட்கேஜ் ஆனாலும் சரி, மீட்டர் கேஜ் ஆனாலும் சரி, பழைய நீராவி இஞ்சினுக்கு உள்ள கம்பீரம் டீசல் இஞ்ஜினுக்கும் மின்சார இஞ்ஜினுக்கும் இல்லையே?

! காங்கிரஸ் ஆனாலும் சரி, திராவிட பாரம்பரியக் கட்சிகளானாலும் சரி, பழம்பெரும் தலைவர்களிடமிருந்த கம்பீரமும் வாய்மையும் இன்றைய தலைவர்களிடம் காணோமே!

● மு. மதிவாணன், அரூர்.

? சீனாவில் லஞ்சம் வாங்கிய பெண் அதிகாரிக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டுள்ளது பற்றி...?

! அங்கேயும் அரசியல்வாதிகள் தப்பி விடுகிறார்கள் போல!

● ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

? 'இங்குள்ள ஏழை எலும்புகளை மறைத்து விட்டு குடியரசுதின விழாவுக்குச் சிறப்பு விருந்தினராக அயல்நாட்டுத் தலைவர்களை அழைப்பது புண்ணை மறைக்கப் புனுகு பூசும் செயல்' என்று கருணாநிதி கூறுகிறார்?

! இது கோணல் பார்வை. தென் ஆப்பிரிக்காவிலும் ஏழை எலும்புகள் உண்டு. அவர்கள் மண்டேலாவைப் பார்த்து இந்தப் பாணியிலா பேசுகிறார்கள்? இல்லையே! அயல்நாட்டுத் தலைவரின் வருகை நல்லுறவுகளை வளர்த்து, புதிய தொழில்-வர்த்தகத் திட்டங்களுக்கு அடிகோலும். அதனால் இருநாட்டு ஏழை எலும்புகளுக்கும் பயன் கிட்டும். இல்லாமலா மண்டேலா 'இந்து மாக்கடல் நாடுகளின் வர்த்தக மண்டலம்' பற்றிச் சிந்திக்கக் கோருகிறார்?

● ஸ்ரீகுமாரன், தண்டராம்பட்டு.

? ஒவ்வோர் ஆண்டும் பட்ஜெட்டுக்கு முன்னால் பொருட்களின் மதிப்பு உயர்கிறது.

ஆனால் மனிதன் மதிப்பு உயரவில்லையே?

! நமது மதிப்பை நாமே உணராததுதான் இதற்குக் காரணம். செய்யும் தொழில் எதுவானாலும் அது இந்நாட்டின் உயர்வுக்கு உதவுகிறது என்று புரிந்து கொண்டு மனப்பூர்வமான ஈடுபாட்டுடன் செயல்பட்டால் நமது மதிப்பை நாம் நிச்சயம் உணர்ந்தவராவோம்.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? ரயில் நிலையங்களை அழகுபடுத்திப் பராமரிக்கும் பொறுப்பைத் தனியாரிடம் விட முடிவு செய்யப்பட்டிருப்பது பற்றி...?

! பேசாமல் ரயில்களையும் கூட தனியார் வசம் ஒப்புவித்து விடலாம் என்று தோன்றுகிறது. தனியார் வசமிருந்தால், தாம்பரம் - பீச் அகல ரயில் பாதை தயாரான நிலையிலும் ஜாபர் ஷெரீஃபின் தேதி கிடைக்கவில்லை என்பதற்காக இன்னும் பயன்படுத்தப்படாமல் நஷ்டம் விளைவித்துக் கொண்டிருக்குமா?

● புளியரை கணேசன், சென்னை.

? பெங்களூரில் அப்பாவித் தொழிலாளர்களின் சிறுநீரகங்கள் அகற்றப்பட்டது குறித்து?

! கிட்னி வியாபாரம். ஒன்று அவர்கள் ஏமாந்து போயிருக்க வேண்டும்; அல்லது பணத்துக்கு ஆசைப்பட்டு கிட்னியை இழந்திருக்க வேண்டும். இரண்டு கொடுமைகளுக்குமே அடிப்படைக் காரணம் தரமான கல்வி அறிவு இல்லாமை. அதை மக்களுக்கு அளிக்காத அரசுதான் முதல், மாபெரும் குற்றவாளி!

● சீதா மகன், மதுரை.

? நிலவைப் பெண்ணாகவே வர்ணிக்கின்றனரே, ஏன்? ஆணாக யாரும் சிந்திப்பதில்லையே...?

! "அன்நிலைப் போல அவன்
சந்திரவதனம் நோக்கி
நங்கை இருந்தாள் என்று
சொல்வாய் பைங்கிளியே"
- அமரர் கல்கி

"சந்திரபிம்ப முகமலராலே
எனைதானே பார்க்கிறார்...."
- அருணாசலக் கவிராயர்

கவிஞர்களின் வர்ணனைகள், நாயகனின் புற அழகோடு மட்டுமின்றி, குண இயல்புக்கும் சந்தர்ப்பத்துக்கும் ஏற்பவும் அமையும்.

● வரத சண்முக சுந்தரவடிவேலு, எத்தாப்பூர்.

? ஸ்ரீதரன் எம்.பி., "நான் அப்பாவி, நிரபராதி" என்கிறாரே?

! குற்றம் சாட்டப்பட்ட எல்லோருமே சொல்வதுதான் இது. படித்தவர், விஷய ஞானமுள்ளவர், தாம் பலிகடா ஆக்கப்படும்வரை ஏன் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தார்? வழக்கு நடந்து "குற்றமற்றவர்" என்று விடுதலையான பிறகு ஜனதாவில் சேர்த்துக் கொண்டிருந்தால் சரி. முன்பே சுசுவாமி அனுமதித்தது அரசியல் ஆதாயத்துக்கே. வேறு பல கள்ளக்கடத்தல் எம்.பிக்கள் இருப்பதாலேயே ஸ்ரீதரன் புனிதராகி விட மாட்டார்.

● ச. ஜான்ரவி, கோவில்பட்டி.

? பணிமனைகள் ஒவ்வொன்றிலிருந்தும் வரும் பேருந்துகளுக்கு ஒவ்வொரு வித வர்ணம் பூசப்பட்டால்...?

! குழப்பம்தான் அதிகரிக்கும். ஏற்கெனவே சென்னை நகரப் பேருந்துகள் வானவில்லின் அத்தனை நிறங்களிலும் ஓடி சொதப்பிக் கொண்டிருக்கின்றன!

● எம். எம். ஆனந்தன், வந்தவாசி.

? "காந்திஜி இளம் வயதில் மதுவுக்கு அடிமைப்பட்டிருந்தார்" என நா. காமராசன் எழுதியுள்ளாரே?

!. 'மது அருந்தியிருக்கிறார்' என்று கூறுவது சரியாக இருக்கலாம்; 'அடிமைப்பட்டிருந்தார்' என்று எழுதுவது அறியாமை.

□ ரூ. 25 பரிசு பெறுபவர்:
எஸ். சந்திரா,
44, கனகவேல் காலனி,
ராஜா மில் ரோடு,
மதுரை 625 001.



• "புண்ணுக்குப் புனுகு"

• "அப்பாவி; நிரபராதி"

• தற்கொலைப்படை.....

நீங்கள்
கேட்டவை
- தராசு

# வெற்றிக்கு வியாபார தந்திரம் தேவையா?



📖 "நகரத்தார்" என்று ஏன் பெயர் வந்தது தெரியுமோ? எந்த நாட்டிலே எந்த நகரம் தோன்றினாலும் அங்கே குடியேறி, அந்த நகரின் செழிப்புக்காக உழைப்பதுடன், நகர மக்களின் பண்பாட்டுக்கும் உதவு கிறவர்கள் செட்டியார்கள். அதனால்தான் அவர்களுக்கு "நகரத்தார்" என்றும் ஒரு பெயர்.

📖 சென்னையில் கார்கள் 'விர் விர்'ரென்று அங்குமிங்கும் போய்க் கொண்டிருந்தன. சிறுவன் திருநாவுக்கரசு அவற்றைப் பார்த்து. "இதெல்லாம் காரா, நான் வாங்கப் போகிறேன் பார், கார்!" என்று நினைத்துக் கொள்வான்!

📖 தமிழ்வாணனும் திருநாவுக்கரசும் ஆளுக்கு முந்நூறு ரூபாய் போட்டு "ஜில் ஜில்" பதிப்பகம் தொடங்கினார்கள். கையகலசைஸில் புத்தகம் வெளியிட்டார்கள். ஓரணா (ஆறு பைசா) விலையுள்ள அந்தப் புத்தகங்களைத் தாங்களே தலைமேல் சுமந்து சென்று மாணவர் நடமாடும் இடங்களுக்கெல்லாம் போய், கூவிக் கூவி விற்றார்கள்!

📖 "மக்களைக் கவர வியாபார தந்திரமாகச் சிலவற்றைச் செய்துதான் ஆக வேண்டும்" என்றார் தமிழ்வாணன். ஆனால் திருநாவுக்கரசு இதை ஏற்கவில்லை. துரித வழியில் பணம் சம்பாதிக்க விரும்பவில்லை. "நல்ல புத்தகங்கள் மெதுவாகத்தான் விற்கும்; பரபரப்பான வழிகளில் வியாபாரம் செய்வது எனக்குப் பிடிக்காது" என்று இவர் ஒதுங்கி விட்டார்.

📖 இன்றும் திருநாவுக்கரசு தமது பதிப்பகத்தில் வெளியாகும் நூல்களில் துப்பாக்கி, டுமீல் டுமீல், இரத்தம், படுகொலை இவையெல்லாம் இல்லாமல் பார்த்துக் கொள்கிறார். "தமிழ் மக்கள் மனத்தில் வன்முறையை விதைக்க வேண்டாம். அது வளர்ந்தால் தமிழ் நாட்டையே அழித்துவிடும். எனது பதிப்பகம் பணத்துக்காகப் பண்பாட்டைக் கொல்லாது" என்கிறார்.

📖 1955 ல் வானதி பதிப்பகம் தொடங்கியாகி விட்டது. திருநாவுக்கரசின் துணைவியார் காளியம்மை ஆச்சி கடைசியாக வைத்திருந்த சொச்ச நகைகளையும் விற்று, எல்லாப் பணத்தையும் வானதி பதிப்பகத்தில் முதலீடாகப் போட்டு ஆரம்பித்தார்.

📖 வாழ்க்கை வரலாறு என்றாலே வயிற்றைக் கலக்குகின்ற இன்றையச் சூழலில் வானதி திருநாவுக்கரசு பற்றிய இந்த நூல் வெளியாகியுள்ளது.

📖 குழந்தைகளுக்காகவே அவர் எழுதத் தொடங்கி, தொடர்ந்து எழுதினார். பதிப்பாளராகவும் வெற்றி பெற்றுள்ள இவரைக் குழந்தைகளுக்கு அறிமுகம் செய்யும் விதமாகவே எழுதப்பட்டுள்ளது எனினும் பெரியோரும் படித்துப் பயன் பெறலாம்.

📖 குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்திய போட்டியில் ஏ.வி.எம். அறக்கட்டளையின் தங்கப் பதக்கப் பரிசு பெற்றது இந்த நூல்.

📖 "அரும்புகளுக்கு ஓர் அரசரின் கதை" ஆசிரியர் : வெற்றிவேலன், கங்கை புத்தக நிலையம், சென்னை - 17. விலை ரூ. 25/-

— பாலன் பூங்குழலி

# மாமியின் அட்வைஸ்!

## சோம. வள்ளியப்பன்

ஜனசந்தடியற்ற அந்த நெடுஞ்சாலையில் வேகமாக ஸ்கூட்டரில் போவது பரசுராமனுக்குச் சுலபமாக இருந்தது. மாலதிக்கும் அந்த சுத்தமான காற்று சுகமாக இருந்திருக்க வேண்டும். பரசுராமன் ஏதோ சொல்ல, காற்றின் வேகத்தில் காதில் ஏதும் விழவில்லை. பரசுவை இன்னும் நெருங்கி "என்னங்க?" எனக் கத்தினாள்.

ஆமாம். கத்தினால் என்ன? யார் காதில் விழப் போகிறது? இது என்ன அவர்கள் ஒண்டுக் குடித்தனமா? குரலைத் தாழ்த்திப் பேச! இப்பப் பார்க்கப் போகிற வீடு ஆயிரம் சதுர அடியாமே! இரண்டு ரூம்... ஒரு பூஜையறை...

பரசுராமன் ஸ்கூட்டரின் வேகத்தைக் குறைத்தான்.

"என்னது! வழி சரிதானா? இருபது நிமிஷத்துல வந்திரும்ன்னான் புரோக்கர். போகப் போக அனுமார் வால் மாதிரி நீண்டுண்டே போறதே..."

"யாரையாச்சும் கேளுங்களேன்..."

"இரண்டு பக்கமும் மரந்தான் இருக்கு... அதை யார் கேக்க முடியும்?"

"அதோ... ஒருத்தன் சைக்கிள்ல..."

ஸ்கூட்டர் சைக்கிள்காரனை நெருங்க... "எம்ப்பா... மாருதி நகர் இங்க எங்கப்பா... இருக்கு?"

"நே... ரா... போ சாமி..."

அவன் சொன்ன நே'ரா'வின் அழுத்தம் இன்னும் தூரம் அதிகமென்று உணர்த்த, கியர் மாற்றினான்.

இருவரும் பேசவில்லை. 'இவ்வளவு தூரமா?' என்று பேசி புது வீடு யோசனை கெட்டு விடக் கூடாது என இருவருமே நினைத்தார்கள்.

இருவரும் பேசவில்லை. 'இவ்வளவு தூரமா?' என்று பேசி புது வீடு யோசனை கெட்டுவிடக் கூடாது என இருவருமே நினைத்தார்கள்.

பரசுராமன் கண்களுக்குத் தூரத்துக் குடியிருப்புகள் தென்பட்டதும் படுமகிழ்ச்சி.

"அதோ பாத்தியா... சாயங்கால வெயில்ல... எப்படியிருக்குன்னு... அதோ அதான் மாருதி நகர்..."

தார் சாலையிலிருந்து வண்டி வலதுபுறம் திரும்ப, 'மாருதி நகர் உங்களை வரவேற்கிறது' என்ற போர்டை சந்தோஷத்துடன் பார்த்தபடி நகர்ந்தார்கள்.



"எவ்வளவு தள்ளித் தள்ளி ஒவ்வொரு வீடும்...! இப்ப என்னடான்னா ரஞ்சிதம் மாமி, வெங்கு மாமா இருமல் பாட்டி... எல்லாரையும் நம்ம மடியில கட்டிண்ட மாதிரி..."

"இப்ப ஏன் நம்ம குடித்தனத்தை நெனச்சிண்டு? நமக்கு அவன் என்ன நம்பர் சொன்னான்...?"

"வீட்டு நம்பர் பதினாறுன்னான். அதோ... போர்டு இருக்கே."

மொத்தம் முப்பது வீடுகள் இருந்தால் அதிகம். பதினாறாம் நம்பர் வீடு. மாடியும் கீழுமாக இருக்க, கீழ் வீட்டிலிருந்து ஒரு நடுத்தர வயது மனிதர் இவர்களை வரவேற்றார்.

உள்ளே நுழைகையில் வாசலில் இருந்த சின்ன ரோஜா செடிகளை மாலதிக்குக் கண்களால் ஜாடை காட்டினான் பரசுராமன். அவனுக்குத் தோட்டக் கலையில் ஆர்வமுண்டு.

பரஸ்பரம் அறிமுகம் முடிந்தது. மேல் வீட்டைப் பார்த்துவிட்டு, பரசுராமன் அங்கு குடிவரலாமென்று இருந்தான். இப்பொழுது இருக்கின்ற வீடு மிகவும் சிறியது பல குடித்தனங்களுள்ள நெருக்கடியான இடம்.

மாலதிக்கு ஹாலில் இருந்த சாமான்கள் மிக சொற்பம் எனப்பட்டது. நாம இப்ப இருக்குற மொத்த வீடு அளவு இந்த ஹாலே இருக்கே! மாடியில் எத்தனை ரூமோ! பூஜையறையோ! சமையலறை எப்படியிருக்கும்? மனது அலை பாய்ந்தது.

"மாடியாத்து சாவி உங்களண்டை இருக்குன்னாரே? இருக்கா?"

கேட்டே விட்டாள்.

"பேஷா... எடுத்துண்டு வர்றேன். மாடிக்கே போயிடலாம். ஒரு வா காப்பி சாப்பிட்டுட்டுக் காண்பிக்கலான்னுதான்."

பரசுராமனுக்கே ஒருமாதிரியாகி விட்டது, சுதாரித்துக் கொண்டு,

"மெதுவா... போலாம். ஒண்ணும் அவசரமில்ல..." மாலதியைக் கண்ணால் கண்டித்த படி... "தூரந்தான் சித்த அதிகம்ன்னு தோணறது..."

பஞ்சாபகேசனுக்குக் கோபம் வந்து விட்டது.

"என்ன, இதைப் போய் தூரம்னுட்டேள்? அவனவன் ஜோலார்பேட்டையிலிருந்தும், அரக்கோணத்திலயிருந்தும் டெய்லி மெட்ராஸ் வர்றான் சார்... ஸ்கூட்டர் உங்களது தானே!"

மாமா சத்தம் கேட்டு மாமி அடுப்பங்கரையிலிருந்து வெளியே முகம் காட்டினார்கள். பயந்த சுபாவம் மாதிரி தெரிந்தார்கள்.

"ஸ்கூட்டர் என்னுதுதான் சார்..." பரசுவிற்குக் குரல் உயரவில்லை.

"பின்ன என்ன? எத்தனை மணிக்கு ஆபீசு?"

"பத்துக்கு..."

'ஹா ஹா ஹா' என மாமா சத்தமாய்ச் சிரிக்க, மாலதியும் பரசுவும் விழித்தார்கள்.

"இங்க இருபத்து இரண்டுல 'டிவிஎஸ்' வெங்கு இருக்கார். எட்டு மணிக்கு பாக்டரி. இங்கயிருந்து பஸ் ஸ்டாண்டுக்கு சைக்கிள்ளயே போயிடறார்... பத்து மணி ஆபீசுக்கு.. நீங்க என்னடான்னா... யோசிக்கிறேள். அதுவும் ஸ்கூட்டர் வச்சிண்டு..." மீண்டும் சிரிப்பு.

"நமக்குப் பரவாயில்லை சார். குழந்தைகளுக்கு ஸ்கூலுக்கு...."

"டெய்லி வேன் போறது. அரேஞ்ச் பண்ணியிருக்கோம்! எட்டுக்கு வந்திடுவான். மெயின் பஸ் ஸ்டாண்ட்ல வேணாலும் இறங்கிக்கலாம். இல்ல..."

"பஸ் இங்க வராதா?" மாலதிதான். ஆனால் கேள்வியை ஹாலுக்கும் சமையலறைக்குமாய் நின்ற மாமியைப் பார்த்துக் கேட்க...

"என்னைக் கேளுங்கோ! பஸ் காந்தி நகர் போறது அந்த பாலத்தாண்ட நிக்கிறான். அவன் உள்ள வந்துட்டுப் போகணுமின்னு எம்.எல்.லேயண்ட மனு குடுத்திருக்கு."

"அங்கயிருந்து இது இரண்டு கிலோ மீட்டர் இருக்குமே!"

"பயப்படாதீங்க சார்! சீக்கிரமே வந்திடும்."

"காஸ் சிலிண்டருக்கு?" மாலதிக்கு அவள் கவலை.

"நாமதான் எடுத்துண்டு வரணும். பக்கத்துல வெட்டுப்புரத்துல 'இன்டேன்' இருக்கு. வந்திடும்! கூடிய சீக்கிரம் இங்கேயே..."

"காய்கறி எல்லாம்...?" மாலதி மாமியைப் பார்க்க...

"வர்றான்.. நமக்கு மாம்பலத்துல கிடைக்குறதை விட சீப்பா.. பச்சைத் தண்ணியா... கௌரி.. அந்த வெண்டக்காயக் கொண்

---

"பெரியவனா போய், கைநிறைய சம்பாதிச்சு, எனக்கு என்னடா வாங்கித் தருவே?"

"முதுகு சொறிஞ்சு விட ஒரு 'ரோபோ' வாங்கித் தரேன் பாட்டி...."

- ஆர். வசந்த குமார்



## மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம் - 23

ஒருவருக்கொருவர் எதிரும்புதிருமாகச் செயல்பட்டுக் கொண்டிருப்பவர்களின் பெயர்களைத்தான் கீழே கொடுத்திருக்கிறோம். ஆனால் மாற்றி மாற்றிக் கொடுத்திருக்கிறோம். நீங்கள் சரியான முறையில் கீழே கொடுக்கப்பட்டுள்ள இடத்தில் எழுதிப் பத்திரப் படுத்துங்கள். 26-வது போட்டியை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். அதன் முடிவில் மொத் தமாக எல்லா கூப்பன்களையும் அனுப்புங்கள். மிக அதிகமான போட் டிகளில் கலந்து கொண்டு அதிக வெற்றிகளைக் குவிப்பவருக்கு மோட்டார் சைக்கிள் பரிசு. ஆறுதல் பரிசுகளும் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.





1. ஜெயலலிதா x டி. என். சேஷன்
2. குஞ்சுமோன் x உம்மன்சாண்டி
3. லாலுபிரசாத் x முலாயம்சிங்
4. என். டி. திவாரி x சென்னாரெட்டி
5. சுஜாதா x ஷங்கர்
6. கருணாகரன் x அந்துமணி





1. ஜெயலலிதா x
2. குஞ்சுமோன் x
3. லாலுபிரசாத் x
4. என். டி. திவாரி x
5. சுஜாதா x
6. கருணாகரன் x

பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

டாடி... பச்சையாகவே சாப்பிடலாம். அவ்வளவு நன்னா இருக்கும்" - பஞ்சாபகேசன்.

மாமி கொண்டு வர, 'மொறக் மொறக்' எனக் கடித்துத் தின்றார். பரசுராமனும் மாலதியும் திகைத்துப் போய் பார்க்க,

"அப்புறம் வேறென்ன டவுட்டு...? எல்லாத்தையும் கேட்டுடுங்கோ... அங்க மெட்ராசுல... இந்த மாதிரி வீட்டுக்கு என்ன வாடகை தெரியுமோ...? மூவாயிரம் குடுத்தாலும் கிடைக்குமோ! குழந்தைகள் ஓடியாட முடியுமா? ஒரு காய் கனி செடி போட முடியுமா நம்மள மாதிரி மிடில் கிளாசால? இடிச்சிண்டு, நசுங்கிண்டு... நான்தான் பர்ஸ்டு இங்க குடித்தனம் வந்தது. ஒரு வருஷம் ஆச்சு. என்னடி வாயில என்ன கொழுக்கட்டையா? சொல்லேண்டி கௌரி...!"

மாலதி விடுவதாயில்லை.

"எனக்கு பிரதோஷம் பார்க்கணுமே! பக்கத்துல சிவன் கோவில் ஏதாவது..."

"மனசுலதாம்மா சாமி... சாமி எல்லாம் ஒண்ணுதான். இங்க ஒரு அம்மன் கோவில் இருக்கேடி, கௌரி சொல்லேன்..."

அந்த மாமி தலையாட்ட... அவர்கள் முகமே மங்களகரமாயிருந்தது. பின்பு காப்பி வந்தது. பாலின் பெருமையை மாமா சொல்ல, மாடி வீட்டைப் பார்க்க படி ஏறினார்கள்.

**மா**டி வீடு சுத்தமாகவும், நேர்த்தியாகவும் இருந்தது. மாலதிக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது. பரசு கேள்விகளும் மாமா பதில்களும் தொடர்ந்தன.

"யோசிச்சிண்டே இருந்தா.. முடியாது. நாங்களெல்லாம் இல்லியா?. வந்திடுங்கோ. வர்ற பதினாறு நல்ல நாள். பால் காய்ச்சிடுங்கோ. வாடகை அடுத்த ஒண்ணிலிருந்து பார்த்துக்கலாம். நான் வீட்டு ஓனரண்ட சொல்லிடுறேன்."

பரசுராமன் தலையாட்டிக் கொண்டேயிருக்க, மாலதி ஜன்னல் வழி கீழ் வீட்டைப் பார்த்தாள். மாமி நிற்பது தெரிந்தது. கீழே வருமாறு ஜாடை செய்வது போலிருக்க, மாலதி கீழிறங்கினாள்.

விடுவிடுவென்று உள்ளே போக, மாமி தாழ்ந்த குரலில் மாலதியிடம்,

"அவர் சொல்றாருன்னு வந்துடாதீங்கோ. அவா ஆம்பிளை, காலையில ஓடிட்டா, இராத்தான் வருவா. பகலெல்லாம் பயமா இருக்கு. ஒரு விஷயமும் எட்டேறல... எல்லாத்துக்கும்.. தூரமாயிடுத்து. வேண்டாம்... வந்திடாதீங்கோ... மகா சிரமம்... தெரியாத வந்து மாட்டிண்டோம்...!"



# வாக்குக் கேட்கும் அடிமை!

பாரதி அவர்களின் "தொண்டு செய்யும் அடிமை! உனக்குச் சுதந்திர நினைவோடா?" எனும் பாட்டின் மெட்டில், ஒரு வேட்பாளரைப் பார்த்து ஒரு குடிமகன் கூறுவதாய்.....

**வா**க்குக் கேட்கும் அடிமை! - உனக்குத்
தேர்தல் நினைவோடா?
நாக்குச் சுத்த முண்டோ? - அதற்குள்
பொய்யைக் கலந்திருப்பாயோ?

கோஷ்டிச் சண்டை போச்சோ? - நீயக்
கொள்கைச் சண்டை போச்சோ?
வேஷ்டி சேலை வேண்டாம்! கண்முன்
நிற்கொணாது போடா!

மிச்சம் வைப்பாயோ? - கஜானா
காலி யாக்கு வாயோ?
பிச்சை வாக்குக் கேட்கும் - அடிமைப்
பழக்க மொழித்தாயோ?

கொள்கை பயின்றாயோ? - அடிமை!
உடலில் உணர்வுண்டோ?
உள்ளத்தின் வார்த்தை கேள்! - வாக்கு
உனக்கில்லை மறந்திடடா!

திருந்தி வாழு வீரோ? - உங்கள்
திருந்தும் எண்ணம் போச்சோ?
வருந்தி வாழும் மக்கள்! - அவர்கள்
கண்ணீரைத் துடைத் தீரோ?

நாட்டைக் காப்பதற்கே - உனக்கு
அருகதை சிறிது முண்டோ?
கட்-அவுட் காக்கப் போடா! - அடிமை
போஸ்டர் ஒட்டப் போடா!

— ந. சுந்தர்





●● வீணை எஸ். பாலசந்தர் வாசித்து எச். எம்.வி. வெளியிட்ட Marvellous Melakartha Melodies தேவை. 12 காஸட்களில் 7-12 கிடைத்தாலும் போதும். ஒலிப்பதிவு செய்து தருவதானாலும் சரி. விலை - விவரம் எழுதவும்.

– மீனாட்சி பாலகணேஷ்,
த.பெ. எண். 359, 18வது கிராஸ்,
மல்லேசுவரம், பெங்களூர் - 560 003.

●● செயற்கை வைரம் தயாரிப்போர் தொடர்பு கொள்ளவும். அத் தொழில் கற்றுக் கொண்டு ஈடுபட விருப்பம்.

– எம். சண்முகம்,
1055, 36வது குறுக்குத் தெரு,
திருவள்ளுவர் நகர், சென்னை - 41.

●● நல்ல நிலையில் இயங்கும் செயற்கை வைரம் பட்டை தீட்டும் இயந்திரங்கள் விற்பனைக்குத் தயாராய் உள்ளன.

– எஸ். பத்மாசனி,
20, கிழரத வீதி,
திருநெல்வேலி
- 627 006.



# பாலம்

●● பிராணாயாமம் பற்றிய முழு விவரமும் செய்முறை விளக்கமும் அடங்கிய புத்தகம் தேவை.

– ஜீவியன்,
20, வேப்பம்தோப்பு தெரு, திண்டுக்கல் - 7.

●● பாலிமர் ஷீட்டில் கம்ப்யூட்டர் டைப் செட் செய்து, அதை வைத்து இயக்கக் கூடிய மினி ஆஃப்செட் - சிங்கிள் கலர் தேவை. விவரங்கள் எழுதவும்.

– திருமதி ரோஸ்லின், 4/454 அன்பு நகர்,
மதுரை - 625 020.

●● ஹென்றி ஜேம்ஸ் எழுதிய புத்தகங்கள் ஆய்வுக்குத் தேவை. வைத்திருப்போர் கொடுத்து உதவுக.

– ஜி. கணபதி சுப்பிரமணியன்.
25, 4-வது கிராஸ்,
ஜயபாரத் நகர்,
பெங்களூர் - 560 033.

●● ரேடியோ ரிப்பேர் செய்யும் நுணுக்கங்களைத் தெரிந்து கொள்ள விருப்பம். உதவும் மனம் உள்ளவர்கள் தொடர்பு கொள்க.

– ஏ. கனகபாண்டியன்,
1060, சலிவன் வீதி,
கோவை - 641 001.

●● மைசூர் பல்கலைக் கழகம் எம்.ஏ. (ஹிந்தி) முதலாமாண்டு, இரண்டாம் ஆண்டு நோட்ஸ், புத்தகங்கள் அனைத்தும் விலை கொடுத்துப் பெற்றுக் கொள்கிறேன்.

– வி. ஆனந்தராஜ்,
28/7, ரங்கராஜபுரம் மெயின்,
கோடம்பாக்கம், சென்னை - 24.

●● உடல் ஊனமுற்றோர் தயாரித்த வாழ்த்து மடல்களை விற்பனை செய்து கொடுக்க விரும்பும் நல்லிதயங்கள், சங்கங்கள் தொடர்பு கொள்ளவும்.

– எஸ். செல்வராஜ்,
1/11, சேஷபுரம்,
தென்னூர், திருச்சி - 620 017.

●● பழைய சைவ சித்தாந்த சாஸ்திர நூல்கள், சுவடிகள், கையெழுத்துப் பிரதிகள் விற்பனைக்கு இருப்பின் விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும்.

– மேலாளர்,
திருவாவடுதுறை
ஆதீனம்,
திருவாவடுதுறை
- 609 803.

●● எங்கள் வித்யாலயாவில் அனைவருக்கும் ஹிந்தி இலவசமாகக் கற்றுத் தரப்படும்.

– இராஜராஜசோழன்,
அபிநவ் ஹிந்தி வித்யாலயா,
மன்னை சாலை, முத்துப்பேட்டை,
திருத்துறைப்பூண்டி (வட்டம்)

●● GATE - 94 (Maths-forcs) notes உள்ளது. 95-க்கும் உதவும். பாதி விலை.

- ஆர். சீனிவாசமூர்த்தி,
4-SF, ப்ருதிவி பார்ஸன்
அபார்ட்மெண்ட்ஸ்,
மதுரை - 625 018.

(பாலம் மூலம் தொடர்பு கொள்ளும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன். முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621. ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-. ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# "HE PROMISED HE HAD SOMETHING THAT COULD CHANGE OUR LIVES... WE WERE AMAZED WHEN HE SHOWED US HOW!"

The friendly man from Eureka Forbes presented his card. "I would like to demonstrate our Euroclean 2000, a cleaning system you could conveniently use everyday," he said. He began to show us how – patiently and thoroughly. From carpets to sofas, from curtains to ceilings, he made everything spotlessly clean. He even showed us how effectively the Euroclean 2000 could clean delicate audio equipment , spray paint our refrigerator or be used for watering our plants. He offered to drop by at home as often as we liked, to train us on how to use the product.



*The friendly man from Eureka Forbes : Part of a successful sales organization.*

"We've helped over one and a half million families discover an easier way to a cleaner home," he said with pride. "Families prefer us because they can contact us directly – with just a phone call ! We have a country-wide service network and offer after-sales service at your doorstep. That's what makes us different from the others".

We were impressed, we bought the Euroclean 2000. And our home has never been cleaner, thanks to the friendly Eureka Forbes man.




*Friends for life*

TRITON/94/EFL/358

***For a visit from the friendly Eureka Forbes man, call or write to:** Bhupesh Gupta Bhuvan, 1st Floor, 85 Sayani Road, Prabhadevi, Bombay 400 025. Tel: 022-4301725/1718.

ERED NO. M. 4392
tered as Newspaper in Srilanka

தலைவலி உங்கள் மண்டையைப் பிளக்கும்போது.

முக்கியமான வேலைகளை அலுவலகத்தில்

சரிவர செய்ய முடிவதில்லை.

# தலைவலியை விரட்டுங்கள்
# ஜண்டு பாம் தடவுங்கள்

விரைவில் துடிப்புடன் விளங்குங்கள்.



ஜண்டு பாம் ஜண்டு பாம் வலியை நீக்கும் பாம்
ஜலதோஷம் தலைவலி நோவுகளையும்
நொடியில் நீக்கிடுமே

## பாம் ஒன்று, செயல் மூன்று.

1. ஜலதோஷம்
2. தலைவலி
3. உடம்பு வலி




30, 10 கிராம் பேக்கிலே

AP/ZB/524/94/TAM/H